# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை




சிலம்பு-௫௫] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௨, ஆடி Aug '81 [பரல் - ௧௨

---

## ‘செந்தமிழ்ச் செல்வி’ உறுப்பினர்கட்கு

இவ்வாண்டு ஆடித்திங்களோடு செந்தமிழ்ச் செல்வியின் 55 ஆவது சிலம்பு முடிவுற்று, அடுத்து வரும் ஆவணித் திங்களிலிருந்து 56 ஆவது சிலம்பு தொடங்குகிறது. அன்பர்கள் தொடர்ந்து உறுப்பினராகி ஆதரவு நல்கு முகத்தான் அடுத்த ஆண்டுக்குரிய கையொப்பத் தொகையினை (ரூ. 16/-) உடனடியாக அனுப்பிவைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறோம். இன்றேல் அடுத்த இதழினை விலைபெறு அஞ்சலில் (V. P P.) அனுப்ப வேண்டியிருக்கும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

—ஆசிரியர்

### “செந்தமிழ்ச் செல்வி”

ஆண்டுக் கையொப்பம்

(Subscription Rate)

உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

ஆயுள் கையொப்பம்

உள்நாடு ரூ 150 00 வெளிநாடு ரூ. 300 00

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௫ | திருவள்ளுவர் ஆண்டு உ௦௧உ, ஆடி<br>ஆகஃச்டு 1981 | பரல் ௧உ |
|---|---|---|


## மணிவிழாக் காணும் கழகத்தின் வளர்ச்சிக்குத் துணைபுரிந்த பெருமக்களுக்குக் கழக ஆட்சியரின் நன்றியுணர்வு

(முன் இதழ் ௪உ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

திரு. என். கே. வேலன் அவர்கள் தாம் காவல்துறையில் இளநிலை ஆய்வாளராகச் சேர்ந்த காலமுதல் மாவட்டக் காவல்துறை அதிகாரியாகப் படிப்படியே உயர்ந்த காலத்திலும் அத் துறையினின்றும் ஓய்வுபெற்ற பின்னரும் குழந்தைகளுக்கான நூல்களும் அறிவியல் நூல்களும், நிலவின் கதை, நிலவைச்சுற்றிய கதை, கல்லெண்ணெயின் கதை போன்ற நூல்களை எழுதிச் சிலவற்றிற்கு அரசுவழியும் குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் வழியும் பரிசுகளும் பாராட்டுகளும் பெற்றுள்ளனர். அவர் பணிபுரிந்த 'காவல்துறை' பற்றிய நூலும் அவருக்கு நிலைத்த புகழை ஈட்டித் தருகின்றது.

கருப்பக்கிளர் சு. அ. இராமசாமிப்புலவர் காது சிறிது கேளாத நிலையில் இருப்பினும் உரை நூல்கள், கதை நூல்கள், தமிழ்ப் புலவர் வரலாறுகள், தொகுப்பு நூல்கள், விளக்க நூல்கள் ஆகியவற்றில் ஏறக்குறைய நூறு புத்தகங்கள் எழுதியுள்ளனர். முன்னே கூறிய திரு. என். கே. வேலனும் இவருமே மிகுதியான நூல்களை எழுதிக் கழகத்துக்குப் புகழ் ஈட்டித்தந்தவர்கள் ஆவர். இலக்கியக் கலை என்ற நூலை எழுதிய பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம் அவர்களும், கொசு ஒழிப்பு என்ற நூலை எழுதிய க. வ. முத்தையா அவர்களும், ஆதித்த நல்லூரும் பொருநைவெளி நாகரிகமும், தமிழக சாவகக்கலைத் தொடர்புகள் என்ற நூல்களை எழுதிய

நுண்கலைச் செல்வர் அ. இராகவன் அவர்களும் போற்றிப் புகழுதற் குரியவர்களாவர்.

மருத்துவ நூல்களில் கண் மருத்துவம் எழுதிய டாக்டர் சே. பா. சுப்பிரமணியம் அவர்களும் வாய், பல் மருத்துவம், பல் பாதுகாப்பு ஆகிய நூல்களை எழுதிய டாக்டர் சே. சி. கண்ணப்பன் அவர்களும் நரம்பு மருத்துவம் எழுதிய டாக்டர் லோக முத்துக் கிருட்டிணன் அவர்களும் கண் பாதுகாப்பு எழுதிய டாக்டர் என். எஸ். சுந்தரம் அவர்களும் தோல் பாதுகாப்பு எழுதிய டாக்டர் மா. நடராசன் அவர்களும் கழகப் பதிப்புத் துறைக்குப் புகழ் ஈட்டித் தந்தவர்கள் ஆவர்.

ஆங்கில இலக்கியக் கதைகளில் ஏறக்குறைய சிறந்த முப்பது புத்தகங்கள் கழகவழி வெளிவந்திருக்கின்றன. அவற்றில் பெரும் பான்மையவற்றை மொழிபெயர்த்து இயற்றிய டாக்டர் கு. பரமசிவம் அவர்கள் போற்றுதற்குரியவராவர்.

மொழிப் பேறறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள் 1934 முதல் கழக நூலாசிரியர்களுள் ஒருவராகி இயற்றமிழ் இலக்கணம், கட்டுரை வரைவியல், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், உயர்தரக் கட்டுரை இலக்கணம் ஒன்று இரண்டு பகுதிகள், முதல் தாய்மொழி, பழந்தமிழ் ஆட்சி, திரவிடத்தாய் முதலிய நூல்களை எழுதியதோடு செந்தமிழ்ச் செல்விக்கு முறையாகச் சொல்லாய்வுக் கட்டுரைகள் முதலியன எழுதிவந்தமை மிகவும் போற்றுதற்குரியன. பொரு ளாதாரத் துறையில் மாணவர்களுக்கேற்ற பல நூல்களை எழுதி வரும் பேராசிரியர் மா. பா. குருசாமி அவர்கள் மிகவும் போற்று தற்குரியவராவர்.

இக்காலத்தில் கழகத்தின்பால் பேரன்பு பூண்டவரில் ஆழ்ந்த புலமையாளரும் இனிய செந்தமிழ் நடையில் எழுதும் வல்லாண்மை பெற்றவருமான கழக இலக்கியச்செம்மல் திரு. இரா. இளங்குமரன் அவர்களை இறைவனே கழகப் பணிக்கு எய்வித்தான் என்று கூறி மகிழலாம். என்னுடைய வாழ்க்கை வரலாறு கழக வரலாற் ருேடும் இருபதாம் நூற்ருண்டு தமிழ், இலக்கிய வாலாற்ருேடும் பின்னிப் பிணைந்திருப்பதை அறிந்து அவ் வரலாற்றைச் செவ்விய நடையில் படைத்தளித்துள்ளார் என்பது என்றும் போற்றி மகிழ்தற்குரியது.

இக் கழகத்தின் ஆட்சிக்குழுத் தலைவராக அமைந்து உதவி புரிந்த திரு. மா. வே. நெல்லையப்பபிள்ளை, திரு. ப. சிதம்பரம்பிள்ளை, தொடக்க முதல் இன்றுகாறும் இருந்தும் இப்போது இருந்துவரும் செயற்குழு உறுப்பினர்களுக்கும் என் நெஞ்சார்ந்த வணக்கம் உரியதாகும்.

மறைமலையடிகள் கலைமன்றத்தை வாங்குவதற்கும் நடுவண் அரசும் தமிழக அரசும் பெருந்தொகையை அளிப்பதற்கு உதவி புரிந்த பெருந்தகை சி. சுப்பிரமணியம் அவர்களை நெஞ்சாரப் போற்றும் கடப்பாடுடையேன். கழகம் அறத்திற்கு ஒதுக்கும் தொகைக்கு விதிக்கப்பட்ட வரி ஏற்றதன்று என்று எடுத்துக் கூறி அத் தொகைக்கு வரிவிலக்கு அளிப்பதற்கு உதவியவரும் பெருந் தகை சுப்பிரமணியம் அவர்களேயாவர். அவர்களைக் கழகம் என்றும் போற்றிப் புகழாமல் இருப்பதற்கில்லை.

இக் கழக வளர்ச்சிக்குப் புலவர் பெருமக்களேயன்றி அமைச்சர் பெருமக்கள், அதிகாரிகள், நீதிபதிகள், பொருளியல் வல்லுநர்கள், மேனாட்டு அறிஞர்கள் முதலிய பலதுறையிலும் ஆர்வமும் அக்கறையும்கொண்டு உதவி புரிந்துள்ளனர். அவர்களை எல்லாம் தனித்தனியே பெயர் சூட்டிக் கூற இடமில்லாது போயினும் அவர்களை எனது நெஞ்சத்தடத்தில் நினைந்து போற்றுகின்றேன்.

கழகம் நடத்திய பேரிலக்கியம், சிற்றிலக்கியம், அரசியல், சமய புராணச் சொற்பொழிவு விழாக்களில் சொற்பொழிவுகளை முன்ன தாக எழுதித் தந்து கலந்துகொண்டு சொற்பொழிவாற்றிய பேரறிஞர்களும் அவ் விழாக்களில் கலந்துகொண்டு தலைமை தாங்கியவர்களும் சிறப்புரையாற்றியவர்களும் என் நெஞ்சத்தில் அமர்ந்து இன்பூட்டி வருகின்றனர்.

மேலும் கழகம் நடத்திய பெருவிழாக்களில் கலந்துகொண்ட பெருமக்கட்கும், விழா மலர்கட்கு வாழ்த்துகளும் கட்டுரைகளும் பாமாலைகளும் எழுதியனுப்பிய அறிஞர்களும் பெருமக்கட்கும் விழா நடைபெறப் பெரிய மண்டபங்களையும் அரங்குகளையும் வழங்கிய அற வாணர்கட்கும் எனது நன்றியை உரித்தாக்குகின்றேன்.

கூட்டுப் பங்கு நிறுவனம்பற்றிய செய்தி நன்கு பரவாதிருந்த காலத்தில் நூற்பதிப்புக் கழகம் கூட்டுப் பங்கு நிறுவனமாகப் பதிவு செய்யப்பெற்றது. அவ்வாறு தொடங்கிய காலத்தில் பங்குகள் எடுத்து மணிவிழாக் காண வழிசெய்த கழகப் பங்காளிகட்கு முதற் கண் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

கழகந் தொடங்கிய காலமுதல் 24 ஆண்டுகள் சென்னைக் கிளை முகவராகவும் அதன்பின் இன்றுகாறும் கழக ஆட்சியாள ராகவும் அமர்ந்து மணிவிழாக் கண்டு மகிழ வாய்ப்பளிக்கும் எல்லாம் வல்ல அம்மையம்பலவாணர் பொன்னார் திருவடிகளை வணங்கி மகிழ்கின்றேன்.

—வ. சுப்பையா

———

## 'பதிப்புக் கலைப் பார்வை'-4.

[கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

குறுந்தொகையை முதன்முதல் பதிப்பித்த ஆசிரியர் 'திருக்கண்ணபுரத்தலத்தார் திருமாளிகைச் சௌரிப் பெருமாள் அரங்கனுர்' ஆவர். அவர் பதிப்பு 1915இல் வெளிவந்தது.

அரங்கனுரின் பதிப்புக்குக் கிடைத்த சுவடிகள் மூன்றே. அவை சென்னை அரசின் நூல் நிலையச் சுவடி ஒன்று; மணக்கால் ஐயம்பேட்டை முத்துரத்தின முதலியார் சுவடி ஒன்று; மதுரைத் தமிழ்ச் சங்கச் சுவடி ஒன்று; இவற்றைக் கொண்டே மூலத்தை உறுதிப்படுத்திக் கொண்டு ஒருவாறு உரையெழுதி வெளியிட்டார்.

"இக் குறுந்தொகைப் பழம் பிரதியுடையார் தம் பிரதியைச் சில வாரம் யான் வைத்துக்கொள்ளுமாறு உதவினும் அன்றித் தங்கள்பால் வந்து பார்த்துக்கொள்கவெனக் கட்டளையிடினும் அவர்கள் கருத்தின்படி பார்த்துக்கொண்டு கிடைக்கும் அரியவற்றைச் சேர்த்து மறுபதிப்பிற் பதிப்பிக்குங் கருத்துடையேன் ஆதலின், அங்ஙனம் உதவ முன்வரும் தமிழபிமானம் மிகுந்த தக்கார்களுக்கு இப் பதிப்புப் பிரதியில் ஒன்றைத் தருவதோடு மறுபதிப்பிலும் அவர்கள் பிரதி கொடுத்து உதவியமையைப் பாராட்ட எட்டுணையும் மறவேனுவேன்'' என்று குறுந்தொகைப் பதிப்பில் 'உதவி யுரைத்தல்' பகுதியில் அரங்கனுர் எழுதியுள்ளது, தக்க ஏட்டுச் சுவடிகளைத் தேடி ஆய்தலில் அவர் கொண்டிருந்த பேரார்வத்தை வெளிப்படுத்தும்.

பதிப்புத் துறையில் சீரிய பணிசெய்த திரு. வையாபுரிப்பிள்ளை, அரங்கனுர் பதிப்புப்பற்றி வெளியிட்டுள்ள கருத்துகள் கருதத் தக்கன. "எத்துணையோ பெரும்பிழைகள் காணப்படினும் அரங்கனுரை நாம் போற்ற வேண்டியவர்களாக உள்ளோம். முதலாவது அவர்க்குக் கிடைத்த பிரதிகளின் நிலைமையே பிழைகள் பலவற்றுக்குக் காரணமாயுள்ளது. இரண்டாவது குறுந்தொகையின் நலத்தைத் தமிழ்மக்கள் ஒருவாறு உணரும்படியாகச் செய்தனர். மூன்ருவது தமிழறிஞர்களுடைய உள்ளத்தைக் குறுந்தொகைத் திருத்தத்தில் ஈடுபடும்படியாகச் செய்தனர். நான்காவது குறுந்தொகைக்கு நல்ல பதிப்பு வெளிவர வேண்டும் என்ற அவா தமிழ் நாடெங்கும் உண்டாகும்படி செய்தார்'' (தமிழ்ச் சுடர் மணிகள்)

1930இல் புரசைபாக்கம், டி. என். சேசால ஐயர் என்பார் இரத்தினம் ஐயர் என்பவரின் புத்துரையுடன் 'கலா நிலைய' வெளியீடாகக் குறுந்தொகையை வெளியிட்டார். கா. நமச்சிவாய முதலியார் மூலப்பதிப்பு ஒன்று வெளியிட்டாராம். 1933இல் சோ. அருணசல தேசிகரும் மூலப்பதிப்பு ஒன்று வெளியிட்டார். ஆனால், ''இப் பதிப்புகள் எல்லாம் ஓலைச் சுவடிகள் கொண்டு ஆய்ந்து வெளிப்பட்டன அல்ல'' என்று வையாபுரிப்பிள்ளை குறிப்பிடுகிருர். ஆதலால் இப் பதிப்புகளுக்கு மூலமாக விளங்கியது, அரங்கனர் பதிப்பே என்பது வெளிப்படை.

1933ஆம் ஆண்டில் செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 12, பரல் 10 இல் இருந்து இலந்தையடிகள் வித்துவான் இரா. சாம்பசிவனரால் மூலமும் விளக்கவுரையும் எழுதப்பெற்று 1937ஆம் ஆண்டு வரை வெளிவந்தது. இம் முயற்சி, அரிய முயற்சி; விளக்கம் மேற்கோள் ஆகியன மிக விரிவுடையன; எனினும் ஐம்பது பாட்டுகள் அளவொடும் அமைகின்றது. டாக்டர் உ. வே. சாமிநாதையரின் குறுந்தொகைப் பதிப்பு 1937இல் வெளிவந்த அளவில், இக் கட்டுரை உரை விளக்கத் தொடர் அமைகின்றது என்பது உணர முடிகின்றது. சாம்பசிவனர் தமக்குக் கிடைத்த சுவடி கொண்டும் ஒப்பிட்டாராதல் வேண்டும்; இன்றேல், தாம் தக்க பாடமெனக் கொண்டு திருத்தியிருக்க வேண்டும்; ஏனெனில், ஐம்பது பாடல்களுக்குள் அரங்கனர் கொண்ட பாடத்தில் இல்லாத புதுப் பாடங்கள் மூன்று காட்டியுள்ளார், அவை 'தேமூ ரெண்ணுதல்' (22) அரிதயர் (29) நீனையலேன் (36) என்பன.

1937இல் முனைவர் உ. வே சாமிநாதையர், குறுந்தொகைப் பதிப்பு உரை விளக்கத்துடன் வெளிவந்தது. ஐயரவர்கள் வழக்கம் போல் பல சுவடிகளை ஒப்பிட்டு ஆய்ந்து மூலத்தை உறுதி செய்து கொண்டு உரை விளக்கம் வரைந்து பாடவேறுபாடுகள் மேற்கோள்கள் ஆகியவற்றையும் காட்டி வெளியிட்டார். அவர்தம் ஆய்வுக்குப் பயன்பட்ட சுவடிகள் 9. அச் சுவடிகளாலும் ஐயரவர்களின் அறிவாற்றல், அயரா உழைப்பு, உதவியாளர் திறம் இன்னபல ஏந்துகளாலும் குறுந்தொகைப் பதிப்பு வெளிவந்தது. எனினும், "சில செய்யுள்களுக்கு ஒருவாறு உரை எழுதினும் முடிவு முதலியன தெளிவாக இன்மையின் என் மனத்திற்குத் திருப்தி உண்டாகவில்லை'' என்று அவர்கள் குறிப்பிடுவதால் முற்றிலும் தெளிவான பாடம் கிட்டவில்லை என்பதும் செவ்விய சுவடிகள் கிடைக்கப்பெறுமாயின் மேலும் தெளிவு பெறக் கூடும் என்பதும் அவர்கள் கருத்தாதல் விளக்கமாகும்.

அரங்கனர், சோழவந்தான் கிண்ணிமங்கலம் மடத்தில் இருந்த சிவப்பிரகாச அடிகளிடம் பயின்றவர். அவ் வடிகளிடம் பயின்றவர்களுள் ஒருவர் கந்தசாமியார். அவருக்கு அரங்கனர் குறுந்தொகைப் பதிப்புக் கிடைக்க வாய்த்திருத்தல் இயல்பே. அப் பதிப்பில், தம் ஆய்வுத் திறம் விளங்க ஒப்புமைப் பகுதிகளை மிகப் பெரிய அளவில் சுட்டியுள்ளார் கந்தசாமியார்; பிழைகளைத் திருத்தியுள்ளார். ஐயரவர்கள் பதிப்பில் காணப்பெருத ஒப்புமைப் பகுதிகளையும் கந்தசாமியார் குறித்துள்ளார் எனின், அவர்தம் நினைவுக் கூர்ப்பும் உழைப்பின் அருமையும் புலப்படும். அன்றியும் "இராமசாமிபுரம் மூவரைய வண்ணம் பாடிய பூண்டியப்பப் புலவர் ஏடுபார்த்துத் திருத்தியது" என்னும் தலைப்புக் குறிப்புடன், அவ் வேட்டுச் சுவடியில் கண்ட பாடவேறுபாடுகளையும் குறித்துள்ளார். இப் பாடவேறுபாடுகளுள் மிகப் பல ஐயர் பதிப்பில் காணப்பெறுவன எனினும், காணப்பெருதவையும் உள; அவற்றுள் உண்மைப் பாடம் இதுவே எனக் கொள்ளத் தக்கனவும் உள.

கந்தசாமியார், தாம் குறுந்தொகைச் சுவடியுடன் அச்சிட்ட நூலை ஒப்பிட்டுக் கண்ட பாடவேறுபாடுகளைத் தமிழ்நலம் கருதிய இதழ்களில் வெளிப்படுத்தியிருந்தால் அவ் வெளிப்பாடு அறிஞர்கள் ஆய்வுக்குக் கருவியாக அமைந்திருக்கும். அது, 1946இல் பெரும் புலவர் இரா. இராகவ ஐயங்காரால் உரைவிளக்கம் வரையப்பெற்று அண்ணுமலைப் பல்கலைக் கழக வெளியீடாக வந்த 'குறுந்தொகை விளக்'கத்திற்கு (111 பாடல்கள்) உதவியாக இருந்திருக்கக்கூடும். 1955இல் கழக வழியாக வெளிவந்த பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனர் உரைக்கும் உதவியிருக்கக் கூடும். "மிகநலம் பெற்றுள் தமியள் மூத்தற்று" என்று திருவள்ளுவர் உரைத்தாற் போல் அப் பாடவேறுபாடுகள் அவர்தம் குறுந்தொகை நூலில் எழுதிவைத்த அளவில் அமைந்தன. அவ் வரிய குறிப்புகள் பொதிந்த நூல், அவர்தம் வரலாற்றை எழுதுதற்கு யான் முயன்ற காலையில் கண்டும் கொண்டும் மகிழ வாய்த்தது. அப் பாடங்களை அறிஞர்கள் பயன்படுத்திக்கொள்ளும் ஆர்வத்தால் வெளிப்படுத்தலானேன்.

> "பனைத்தலைக், கருக்குடை நெடுமடல் குருத்தொடு மாயக்
> கடுவளி தொகுத்த நெடுவெண் குப்பை"

என்னும் பாடலில் (372) 'நெடுவெண் குப்பை' என்பதற்கு உரையாளர்கள் 'நெடிய வெள்ளிய மணற்குவியல்' எனப் பொருள் கண்டுள்ளனர். 'வெண்' என்பதற்கு 'வெண்மணல்' என்றது வருவித்து உரைத்தலேயாம். ஆனல் பூண்டியப்பப்புலவர் ஏட்டில்,

"நெடுமணற் குப்பை" என்று பாடமுண்மை இடரின்றிப் பொருள் காண உதவுகின்றது.

309ஆம் பாடலில் "இன்னா தனபல செய்யினும், நின்னின் றமைதல் வல்லா மாறே" என்பதில் "இன்னா தனபல" என்பதற்குப் பூண்டியப்பர் ஏடு, "இன்னா தியல்பல" எனப் பாடம் காட்டுகிறது. இப் பாடம் நுண்பொருள் சிறப்புடையதாம்.

274ஆம் குறுந்தொகை,

"புறவுப் புறத்தன்ன புன்கால் உகாஅய்க்
காசினை யன்ன நளிகனி உதிர"

என்று எல்லாப் பதிப்புகளிலும் உள்ளது. பூண்டியப்பர் ஏட்டால்,

"புறவுப் புறத்தன்ன புன்கால் உகாஅத்
திறவுச் சினையன்ன நளிகனி உதிர"

என அறியப் பெறுகின்றது. இப் பாடத்தால் எதுகை நயம் வாய்ப்பதுடன், உவமை நயமும் செறிதல் வெளிப்படும். இறவுச் சினையாவது இறவு அல்லது இருல் மீனின் முட்டை. அதனை உகாவின் கனிக்கு ஒப்புக் கூறினர்.

பூண்டியப்பர் சுவடியால் அறியப்பெறும் பாடங்களையெல்லாம் குறிப்பிட்டுவிடுதல், ஆய்வார்க்குப் பயனாகும் என்பதால் அவற்றை நிரலே காண்போம்.

(தொடரும்)

---

## 'தேசிய விரிவுரையாளர்' திட்டத்தில் டாக்டர் தமிழண்ணல்

பல்கலைக் கழக நல்குகைக் குழு தனது 'தேசிய விரிவுரையாளர்' திட்டத்தின்கீழ் 1980-'81ஆம் ஆண்டுக்குத் தமிழண்ணல் டாக்டர் இராம. பெரியகருப்பன் அவர்களைத் தேர்ந்தெடுத்துள்ளது. இத் திட்டத்தின்கீழ் தமிழ் இலக்கியக் கொள்கைகளுடன் ஒப்பிட்டு அன்னார் சொற்பொழிவு நிகழ்த்தி வருகின்றார்கள். 'உலக இலக்கியக் கொள்கைகள்' என்ற இது தொடர்பான தம் சொற்பொழிவு நூலில் அவர் தமிழ்க் கொள்கைகளின் சிறப்பை வெளிப்படுத்த முயன்றுவருகின்றார். தமிழ் முதுகலை வகுப்பும் ஆய்வுமுள்ள இந்தியப் பல்கலைக் கழகங்களில் அவர்தம் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பட்டு வருகின்றன.

# கழக ஆட்சியர் 1951இல் யாழ்ப்பாணத்தில் தொற்றுநோய் மருத்துவமனையில் நாற்பத்திரண்டு நாள்கள்

கோவைச் செல்வர் உயர்திரு தி. சு. அவிநாசிலிங்கஞ் செட்டியாரவர்கள் தமிழ்நாடு அரசு கல்வி அமைச்சராக இருந்த போது 17—12—1946இல் தமிழ் வளர்ச்சிக் கழகத்தைத் தோற்றுவித்தனர். தமிழ்நாட்டின் ஆட்சிமொழியும், பயிற்சி மொழியும் தமிழாகவே இருத்தல் வேண்டுமென்று திட்டமிட்டனர். எனவே அதற்கு முன்னோடித் திட்டமாக 15—8—1947இல் 'கலைக்களஞ்சியம்' 10 தொகுதிகளாக வெளியிடுவதற்குப் பதிப்புக்குழு ஒன்றை ஏற்படுத்தினர். அதற்குப் பேராசிரியர் ம. ப. பெரியசாமித்தூரன் அவர்களைத் தலைவராக அமர்த்தினர். கலைக்களஞ்சிய அலுவலகத்திற்குச் சென்னைப் பல்கலைக் கழகக் கட்டடங்களில் ஒரு பகுதியை அப்போதைய துணைவேந்தர் டாக்டர் இலக்குமணசாமி முதலியார் அவர்கள் இடம் ஒதுக்கித் தந்தனர்.

தமிழ் வளர்ச்சிக் கழகம், தமிழில் ஆண்டுதோறும் வெளியிடப் பெறும் சிறந்த நூல்கட்குப் பரிசும் பாராட்டிதழும் வழங்குவதெனத் தீர்மானித்ததோடு, ஆண்டுதோறும் தமிழ்த் திருவிழாவைத் தமிழ் நாட்டிலுள்ள பேரூர்களிலும், தமிழர் பெரும்பான்மையாக வாழும் பிற நாடுகளிலும் மிகவும் சிறப்பாக நடத்த வேண்டுமென்றும் திட்டம் வகுத்து, முதலாம் தமிழ்த் திருவிழா பாண்டி நாட்டு மதுரையில், ஆலவாயண்ணல் திருக்கோயிலில் 1948 சனவரி 1, 2 ஆகிய நாள்களில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இரண்டாம் தமிழ்த் திருவிழா சோழநாட்டுப் பேரூராம் திருவாரூரில் 1949 ஏப்ரல் 16, 17ஆம் நாள்களிலும், மூன்றும் விழா கொங்குநாட்டுத் தலைநகர் கோவையில் 1950 மே 20, 21ஆம் நாள்களிலும் சீரோடும் சிறப்போடும் நடைபெற்றன.

அடுத்து நான்காம் தமிழ்த் திருவிழா திருவருட்செம்மல்களாம் ஆறுமுகநாவலர், சபாபதிநாவலர் முதலிய பெருமக்கள் வாழ்ந்ததும், தமிழ்மக்கள் பெரும்பான்மையாக வாழ்வதுமாகிய வட இலங்கை யாழ்ப்பாணத்தில் நடைபெற இருந்தது. அவ் விழாவிலேயே ஐந்தாம் தமிழ்த் திருவிழாவைத் தென்பாண்டி நாட்டில்-திக்கெலாம் புகழும் திருநெல்வேலியில் நடத்த வேண்டும் என்றும் அதனை யான் ஆங்கு வந்து அறிவிக்க வேண்டும் என்றும் திரு. தி. சு. அவிநாசிலிங்கஞ் செட்டியாரவர்கள் என்னை அழைத்தனர். அதன்பொருட்டு யான் 27—5—1951இல் திருச்சிக்குச் சென்று அங்கிருந்து வானூர்தியில் யாழ்ப்பாணம் போய்ச் சேர்ந்து, யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணையில் என் உறவினர் பாத்திரக்கடை

வைத்திலிங்கம் செட்டியார் மாளிகையில் தங்கினேன். யாழ்ப்பாணம் போன அன்றுமுதல் என் உடலில் ஒருவகைச் சோர்வு ஏற்பட்டது. 29—4—51 இல் நடைபெற்ற முதல் நாள் தமிழ்த்திரு விழாவில் கலந்துகொண்டேன். அன்றே, உடம்பில் சில இடங்களில் கொப்புளம் காணப்பட்டது. தளர்ச்சியும் மிகுதியாக ஏற்பட்டது. 2, 3ஆம் நாள் விழாவுக்கு யான் போகக்கூடவில்லை. 2—5—1951 இல் உடம்பெங்கும் கொப்புளம் பரவலாகக் காணப்பெற்று உணர்வு இழந்துவரும் நிலைமையில் அங்கே கடற்கரைப் பக்கமுள்ள தொற்றுநோய் மருத்துவமனையில் சேர்க்கப்பெற்றேன். மருத்துவமனையில் மூன்று நாள்வரை உணர்விழந்த நிலையில் இருந்துள்ளேன். மருத்துவமனையில் தலைமை மருந்து கலப்பாளராக இருந்தவர் திரு விசுவலிங்கம் என்பார். அவர் மைத்துனர் கணபதி என்பார் உதவியாளராக இருந்தார். அவர் மருத்துவமனையில் என்னைத் தனியே கண்காணிப்பதற்காக அமர்த்தப்பெற்றார். யாழ்ப்பாணத்திலுள்ள என் நண்பர்களில் சிலர் இடையிடையே வந்து பார்த்து ஆறுதல் கூறிவந்தனர்.

21—5—1951 இல் திருஞானசம்பந்தர் விழாவிற்காக அங்கே வந்த கோவை சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்களும், பெரும்புலவர் முத்து. சு. மாணிக்கவாசக முதலியாரவர்களும் மருத்துவமனைக்கு வந்து என்னைப் பார்த்ததும் மனம் பெரிதும் வருந்தினர். தமிழ் என்னாகுமோ, சைவம் என்னாகுமோ ? என்று இருவரும் தமக்குள் பேசிக்கொண்டு சிறிது நேரம் பொறுத்திருந்து 'சுப்பையா பிள்ளை ! நீர் அயராது உழைப்பவர். கட்டாய ஓய்வுக்காகவே இந்தக் கடுமையான நோயை இறைவன் உமக்குத்தந்திருக்கிறான். விரைவில் நலம் பெறுவீர், நீடுவாழ்வீர் !' என்று வாழ்த்தி எனக்கு ஆறுதல் கூறியருளினர். அவர்கள் வருகையும் வாழ்த்திய வாழ்த்துரையும் இன்னும் நினைதோறும் உருக்கமிக்கதாக உள்ளது. அதனைத் திருவருட் செயலே என்று எண்ணி வியப்பும் மிகுகின்றது. இடர் மிக்க அப்பொழுதில் எனக்கு வேண்டும் உதவிகளை உண்ணுமுறைக்கு ஏற்பப் பொழுது தவறாமல் விடுத்துப் போற்றிக் காத்த உறவினர் உளப்பாங்கையும் உள்ளன்பையும் மறக்கவும் ஒண்ணுமோ ? உடம்பிற் காணப்பட்ட கொப்புளங்கள் எல்லாம் காய்ந்து விழவும் தழும்புகள் காணப்பெற்றன. சிலநாள்கள் இளவெந்நீரிலும் பின்பு எண்ணெய் தேய்த்துக் குளித்தும் ஓரளவு நலம் பெற்றபின் 12—6—51 இல் வீட்டுக்கு அனுப்பப்பெற்றேன். ஆகவே 42 நாள்கள் மருத்துவமனையில் யான் தங்கியிருந்தமை தெளிவு.

14—6—51 இல் வானூர்தியில் திருச்சிக்குச் சென்று அங்கே வந்திருந்த என் மருகருடன் தொடர்வண்டி வழியே எனது [illegible]

அடைந்து என் அருமை அன்னையார்க்கும் மற்றும் மனைவி மக்களுக்கும், சுற்றத்தார்க்கும் மகிழ்ச்சியளித்தேன். இவை எல்லாம் திருவருட் செயலே என எண்ணி வணங்குகின்றேன்.



ஆட்சியரும் உதவியரும்

மருத்துவமனையில் எடுக்கப்பெற்ற படத்தில் என்னோடு இருக்கும் அன்பர் திரு. கணபதி என்பவர். அவர் எனக்குத் தாயுமானவராகவும் தாயினும் இனியராகவும் இருந்தமை எல்லாம் வல்ல இறைவன் எனக்களித்த பெரும் பேருகும்.

என்னைக் கழகப் பணிக்கு ஆளாக்கிவிட்ட கழக அமைச்சராகிய என் அருமைத் தமையனர் திரு. வ. திருவரங்கனர் அவர்கள் தமது 54ஆம் அகவையில் இறையடி சேர்ந்தனர். யான் யாழ்ப்பாணத்தில் நோயுற்றிருந்தபோது எனக்கு அகவை 54. அதனல் என்னைப் பெற்ற அன்னையார் "இளையவனகிய இவனவது தன் இறுதிநாள் வரை வாழ்வதோடு கழகத்தையும் புகழ்பெற நடத்த வேண்டும்" என்று இறைவனை வேண்டுவர். என் குடும்பத்தில் என் தந்தையாரோ மற்றும் உடன்பிறந்த மூவருமோ 44 அகவைக்கு மேல் வாழ்ந்ததில்லை. யான் இப்போது என் அன்னையார் அவர்கள் வாழ்ந்த 84ஆம் அகவை எய்தி வாழ்கின்றேன்.

யான் யாழ்ப்பாணத்தில் நலம் பெற்று வந்த பின்னரே, மறைமலையடிகளார் விருப்ப ஆவண வழக்கு நலமாய் முடிவாகி 1958 இல் சென்னையில் மறைமலையடிகளார் நூல்நிலையம் அமைக்கவும் மறைமலையடிகள் வாழ்ந்த பல்லாவர மாளிகை 1962இல் 'கலை மன்ற'மாகத் தொடங்கவும் கழகம் பதிவு செய்யப்பெற்ற திருநெல்வேலியில் கழகப்பணிக்கும், சிவஞானமுனிவர் நூல்நிலையத்

துக்கும் தனித்தனிச் சொந்தக் கட்டடங்கள் எற்படவும் திருவருள் கூட்டி வைத்தது.

1961ஆம் ஆண்டில் 1008ஆவது நூல் வெளியீட்டு விழா, 1968இல் திருவள்ளுவர் விழா, 1970இல் கழகப் பொன்விழா, 1973இல் கழக ஆட்சியாளர் பவள விழா, 1975இல் மறைமலை யடிகள் நூற்றுண்டு விழா, செந்தமிழ்ச் செல்வி பொன்விழா, 1979இல் மறைமலையடிகள் நூல் நிலையம் 20ஆம் ஆண்டு நிறைவு விழா ஆகிய பெருவிழாக்கள் சிறப்பு மலர் வெளியீட்டுடன் நடை பெற்றன. இவையேயன்றிப் பல்வேறு சொற்பொழிவு நூல் வெளி யீட்டு விழாக்கள், பல்வேறு சிறப்பு நூல் வெளியீட்டு விழாக்கள் ஆகியவை நூற்காட்சிகளோடும் நடைபெற்றன.

1969இல் கழக ஆட்சியருக்கு நடுவணரசு பத்மஸ்ரீ (தாமரைச் செல்வர்) என்ற பட்டமும் 1979இல் தமிழரசு "செந்தமிழ்ச் செல்வர்" என்ற பட்டமும் அளித்துப் பாராட்டின.

செந்தமிழ்ச் செல்வி என்னுந் திங்கள் இதழை 55 ஆண்டு களாக நடத்தி வருவதோடு ஏறக்குறைய 1800 நூல்கள் வரை வெளியிட்டுச் சில நூல்கட்குச் சிறப்புப் பரிசும், சில நூல் கட்டடத் துக்குப் பரிசும் பாராட்டும் கழகம் பெற்றுள்ளது.

மேலும் சங்க இலக்கியப் பேழை, பிற்கால இலக்கண இலக்கியப் பேழை, தமிழர் சமய இலக்கியப் பேழை, மாணவர் பல்வகை நூல் பேழை ஆகிய நான்கு பேழைகளை உருவாக்கியும் கழகம் வெளியிட்டுள்ளதைப் போற்றுதாரிலர்.

கழகப் பங்காளிகட்கு 1952இல் ஒரு பங்குக்கு ஒரு பங்கு விருப்பூதியமாகவும் 1963இல் மேலும் ஒரு பங்குக்கு ஒரு பங்கு விருப்பூதியமாகவும் அளிக்கப்பெற்றுள்ளன என்பதும் குறிப்பிடத் தக்கது.

1920 செப்டம்பர் 21இல் பதிவு செய்து தொடங்கப்பெற்ற கழகத்தின் மணிவிழா 1981 செப்டம்பர்த் திங்களில் மிகவும் சிறப்பாக நிகழ இருப்பதும் இறைவன் திருவருளேயாம். இத்தகைய அரும்பொழுதுகளில் எல்லாம், அன்று இடர்மிக்க நோய்வாயினின்று உய்யக்கொண்டு காத்த திருவருளையும், உழை யிருந்து உதவிய உள்ளன்புடையாரையும் உருகி உருகி நினைந்து போற்றுவதும் நன்றி பாராட்டுவதும் நெஞ்சுக்குத் தன்மை பாலிக் கின்றது. கழக வளர்ச்சிப் பணிகளுக்கும் தொண்டுகளுக்கு மெல்லாம் அவர்கள் காலத்தால் செய்த உதவியே அடிப்படை யாமிற்றன்றோ!

———

# திராவிடர்கள்

[க. சி. கமலையா]

(முன் இதழ் சகஉ ஆம் பக்கத் தொடர்ச்சி)

தொன்மைச் சிந்துவெளி நாகரிகத்தின் சிறப்புகள் பின் னெழுந்த வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த இந்திய சமயத்தின் முன்னேடிகளாகும். வைதிக ஆரிய முறைகள் வழியை அடைத்து நின்ற முட்டுக்கட்டைகளாகத் தோன்றினலும் காலப் போக்கில் இக்கால இந்து மதத்துக்கு ஒரு தொடர்ச்சியை நிறுவிச் சிந்து வெளி நாகரிகத்துடன் இணைந்தன. குதிரை, கவசம், வெண்ணெய், தீ வழிபாடு என்பவை இந்திய நாகரிகத்துக்கு ஆரியர்களின் நன்கொடைகளாகும். "என்றாலும், நகர வாழ்க்கையறிவாத, குடிசைவாழ், கால்நடைகளை ஓட்டித் திரிவோர்—உதிரியான—வாணிப மறியா வேத காலத்து மக்கள்—உருவவழிபாடறியா, இலிங்க வழிபாட்டுக்குப் புறம்பானவர்கள், பலவகைப் பண்பாட் டைக் கொண்ட பிற்கால இந்தியாவின் வேரூன்றிக் கிளைத்தவர் களில் ஒரு கிளையேயாவர்.'' [9]

திராவிட—ஆரியப் பண்பாடுகளின் கலவையான இந்துப் பண்பாட்டிற்குத் திராவிடப் பண்பாட்டின் கொடை மிகக் கணிச மானது; மலைபோல் உயர்ந்தது; தலைசிறந்த நாகரிக முத்திரை யுடையது; தனக்கே உரித்தான சிறப்பு மிக்கது; ஆரிய நாக ரிகத்துக்கு ஒப்ப உயர்வுடையது; எவ்வாற்றானும் அதனினும் தாழ்ந்ததன்று. இந்தியப் பண்பாட்டில் திராவிட அடிப்படையின் ஊடுருவலும் சேர்க்கையும் பிணைபலும் பிரிக்க முடியாதவை, மறுக்க முடியாதவை; மறக்க முடியாதவை.

பிறப்பால் உயர்வு மனுவின் அடிப்படைக் கருத்துக்களில் ஒன்றாகும். ஆனல், திருவள்ளுவர் 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்று திருவாய் மலர்த்தருளினர். திராவிட நாக ரிகத்தின் தாக்குதல் காரணமாக ஆரியக் கொள்கைகள் என்று சொல்லப்படுபவை தளர்த்தப்படலாயின. உயர்வு என்ற மனக் கோட்டை திராவிட நாகரிகத்தின் வலிமையால் தகர்க்கப்பட்டது. ஆரியர்கள் மேய்ச்சல் தரைகளைத் தேடியலைந்து கால்நடைகளைப் பேணியவர்கள். பின்னர், சடங்குகளுடனும் மதத்தின் அடிப் படையில் அமைக்கப்பட்ட குழுக்களுடனும் நெருக்கம் வைத்துக்

9. A. C. Kroeber: *Anthropology*.

கொண்டவர்கள். இவை திராவிட நாகரிகத்திலிருந்து செழித்தவை. சிவனையே முழுமுதலாகக் கொண்ட சிவவாக்கியர் போன்ற சித்தர்கள் இத்தகைய அமைப்புகளின் கொடிய எதிரிகளாய் விளங்கினர்கள்.

ஆரியர் வருகைக்குப் பின்னெழுந்த திராவிட இலக்கியத்தில் திராவிட மணம் கமழ்கின்றது. மக்களின் சமயக் குறிக்கோள்கள் தெளிவாகவும் திகைக்கவைக்கும் தனித்தன்மையுடனும் அந்நூல்களில் இடம் பெற்றன. திராவிட மேதகவு முன்னணியில் நின்ற நாகரிகத்தால் உகுப்பப்பட்டு தனக்கே உரித்தான சமய இலக்கியத்தைத் தோற்றுவித்தது. அவ் விலக்கியம் இந்தியாவின் சிறந்த இலக்கியம். எதற்கும் ஈடாக நின்றதோடு மட்டுமன்றி மனித இனம் உண்மையைக் காணும் முயற்சிக்கும் குறிக்கோள்களை அடைய எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளுக்கும் உதவி உலக வரலாற்றில் ஓரிடத்தைப் பிடித்துக்கொண்டது.[10]

1921ஆம் ஆண்டுக்குப்பின் சிந்துவெளி நாகரிகத்தின் உருவம் அரேபியக் கடற்கரையையொட்டித் தென்பகுதியில் விரிவடைந்ததால் மாற்றமும் அடைந்துள்ளது. கடற்கரையையொட்டி எழுந்த தோற்றமும் தொடர்பும் மேலும் ஆராய்ச்சிக்கு உள்ளாயிற்று. கி. மு. இரண்டாயிரம் ஆண்டுகளில் நிகழ்ந்த ஆரியர் படையெடுப்பு ரிக்வேதப் பாடல்களில் காணப்படுகின்றது. கோட்டைகளுக்குள் வாழ்ந்த நாட்டுமக்கள் தாக்கப்பட்டனர். மொகஞ்சதரோ—ஹரப்பா கோட்டைகள் அக்காலத்தைச் சேர்ந்தவையாயிருக்கலாம். மார்ட்டிமர் வீலர் ஆரியர் படையெடுப்பையும் மொகஞ்சதரோ அழிவையும் இணைத்துப் பேசுகின்றார். மொகஞ்சதரோவை அழித்த வீராவேசமுள்ள—காட்டுமிராண்டித்தனமான ஊர் சுற்றிகள்—அலைந்து திரிவோர்—நகர வாழ்க்கையை அறியாதார் நகரங்களை அழிப்பதில் கவலையுறாமல் பராமுகமாயிருந்தார்கள். ஹரியுப்பியாவில் நிகழ்ந்த போர்க்களந்தான் ஹரப்பா என்பது இருக்க முடியாததன்று என்றும் அவர் எழுதியுள்ளார்.[11]

ஆனந்த குமாரசாமி ரிக்வேதத்தை 'இந்தியாவின் பைபிள்' என்று சொல்கின்றார். "இந்தியா முழுவதிலும் சிறுதொகையினராய்ப் பரந்திருந்த திராவிடர்கள் தாசர்கள் அல்லது தாசயூக்கள் என்றழைக்கப்பட்டார்கள். அவர்கள்மீது ஆரியர்கள் போர்

---

10. R. N. Frazer: *Dravidians (Encyclopaedia of Religion & Ethics.)*

11. Mortimer Wheeler: *Early India and Pakistan.*

தொடுத்தார்கள். வேதங்களில் அவர்களுடைய 'புர்' அல்லது புரங்கள் (நகரங்கள்) பற்றிப் பேசப்படுகின்றது. 'அநாச' அல்லது மூக்கில்லாதவர்கள் என்று குறிக்கப்படுகின்றூர்கள். இஃது அவர்கள் இனத்தைக் காட்டும் அடையாளமாகும்.[12]

திராவிடர்களில் என்ற சொல்லாட்சி விரிந்த பொருளில் சிந்துவெளி நாகரிகத்துடன் இணைந்த மக்களையும் ஆரியர் வருகையால் இந்தியாவின் தென்பகுதியைப் படிப்படியாக அடைந்தவர்களையும்--அஃதாவது இந்தியாவின் தென்பகுதியிலும் வடபகுதியிலுமுள்ள திராவிடர்களைக் குறிக்கின்றது என்று கொள்ளலாம். பொதுவாக ஆரியர் வருகைக்கு முந்தி வாழ்ந்த மக்களைத் 'திராவிடர்கள்' என்ற சொல்லாட்சி சுட்டுகின்றது. கி. பி. 8ஆம் நூற்றுண்டில் 'திராவிட' என்ற சொல் தென்னுட்டிலுள்ள 'ஆந்திர திராவிடம்' அல்லது 'தெலுங்குத் தமிழ்' பேசும் மக்களை எந்த எல்லைக்குள்ளும் கட்டுப்படுத்தாது குமரிலபட்டரால் கையாளப் பட்டது. தென்னுட்டுத் திராவிடர்கள் இந்நாட்டுப் பழங்குடிகளா அல்லது மிகமிகப் பழைய காலத்தே வெளிநாட்டிலிருந்து வந்தவர்களா என்பதுபற்றிப் போதுமான செய்தி கிடைக்கவில்லை என்பது ஆர். டபிள்யூ, பிரேசர் கருத்து. தென்னுட்டில் பண்டைக் காலம் தொட்டு வரலாற்றுக் காலம் வரைக்கும் பாதுகாப்புப்பெற்று ஆரிய, ஸ்கைத்திய (Scythian), மங்கோலியப் படையெடுப்புகள்—சமூக நீதிமுறை ஆகியவற்றின் தாக்குதல்களுக்கு அப்பாற்பட்டு அவர்கள் நிலவினர். ஆனல், வடக்கே திராவிட மொழிக்கு முந்தின மொழி பேசிய திராவிடர்களுக்கு முந்திய இனத்தவர் (Proto Dravidian races) மூழ்கிப் போனூர்கள்.

சங்க இலக்கியம் மேல்நாட்டுடன் செய்துவந்த வாணிபம் பற்றியும் தமிழ்நாட்டில் இருந்த யவனர்கள்பற்றியும் பேசுகின்றது. பழங்கால உரோம நாணயங்கள் இன்றும் தமிழ்நாட்டில் தோண்டி எடுக்கப்பெறுகின்றன. அரிக்கமேட்டில் மேற்கொள்ளப்பட்ட புதை பொருளாராய்ச்சியின் பணி சிறப்பு வாய்ந்தது. தமிழ் இலக்கியத்தில் காணும் செய்தியை அரிக்கமேட்டில் அகழ்ந்தெடுக்கப்பட்ட பொருள்கள் உறுதி செய்கின்றன. கிறித்துவ ஊழிக்கு முன்பே நிலவிய திராவிட நாகரிகத்தின் முதிர்ச்சியை ஐயத்துக்கிடமின்றியும் அவை எடுத்தோதுகின்றன.

இந்தியாவில் வாழும் மக்கள் பெரும்பாலும் திராவிடர், ஆரியர் என்ற இரு இனங்களுக்குள் அடங்குவர். இந்தியப் பண்பாடும் நாகரிகமும் இவ்விரண்டு கூறுகளும் அடங்கிய பிரிக்க

12. Ananda K. Coomaraswamy : *Introduction to Indian Art*.

முடியாத கலவை. இந்தியாவுக்குள் புகுந்த ஆரியர்கள் ஈரானி லிருந்த ஆரியர்களினின்றும் பிரிந்து வந்தார்கள் என்பதை நெஞ்சில் கொள்ளவேண்டும். மேய்ச்சல் தரைகளைத் தேடிச் சென்று மாடுகள் மேய்த்த நாடோடிகளாதலால் ஆண்களைக் காட்டிலும் பெண்கள் குறைவாகவே வந்திருக்க முடியும். எவ்வாறு அவர்களுடைய சிந்தனையும் வழிபாடும் மாற்றமடைந்து இயங் கினவோ அதேபோன்று இந்தியாவின் பழங்குடியினருடனும் அவர்கள் கலந்திருக்க வேண்டும். இவ்விரு இனத்தவரைத் தவிர வேறு பல இனத்தவர்களும் இந்தியாவில் இருந்தார்கள் அல்லது இந்தியாவுக்கு வந்தார்கள் என்று கொள்ள வேண்டும். திராவிடர்களைத் தென்னிந்தியாவின் பழங்குடிகள் என்று கொண் டாலும் அல்லது வடக்கிலிருந்து தெற்கில் வந்து குடியேறினார்கள் என்று கொண்டாலும் அவர்களுக்கும் முன்னர் நீக்ரோ இனத்தைச் சேர்ந்த தோடர்கள் வாழ்ந்து வந்தனர். இவர்களுடைய வழியினர் இன்றும் நீலகிரியில் உள்ளனர். பல நூற்றாண்டு களாகப் பல இனத்தவர் பல காரணங்களால் சிறு தொகையின ராய் இந்தியாவுக்கு வந்தனர். பார்சிகளையும் யூதர்களையும்போல் சிலர் அகதிகளாய் வந்தனர். சிலர் உணவு தேடி வந்தனர்; சிலர் இங்குள்ள செல்வங்களைக் கொள்ளையடித்துப் போகலாம் என வந்தனர்; சிலர் ஆட்சி செலுத்தலாம் என வந்தனர். பாரசீகர், கிரேக்கர், ஸ்கைத்தியர், ஹூன்கள், துருக்கர், ஆப்கானியர், அராபியர், மங்கோலியர், ஐரோப்பியர் என்ற பல இனத்தவர் வந்தார்கள். வந்து தங்கிவிட்டோரும் உண்டு; திரும்பிச் சென் றோரும் உண்டு. இந்தியத் துணைக்கண்டத்தில் உள்ள முஸ்லிம்கள் ஆயிரம் ஆண்டுக்காலப் படையெடுப்பின் விளைவாக வந்து பெருமளவு மதமாற்றம் ஆனவர்கள். ஆரிய—திராவிடப் பெரும் பிரிவுக்குள் பலவகை இனச் சாயல்களும் சிறு துளிகளாகக் கலந்து இந் நாட்டுக் கலைகளிலும் அவ்விரு சாயல்கள் உண்டு என்பதை நினைவில் வைத்துக்கொள்ளுதல் நன்று.

———

13. Gertrude Emerson Sen: *The Story of Early Indian Civilization.*

# வேட்டுவனும் முயிறும்

[திரு. பி. எம். சாமி, ஐ. ஏ. எசு.]

செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 55-எட்டாம் பரலில் வேட்டுவனைப் பற்றியும் பத்தாம் பரலில் முயிற்றெறும்பைப்பற்றியும் எழுதியதைத் தொடர்ந்து அவற்றைப்பற்றிய வழக்குச் செய்திகள் சில எனக்குக் கிடைத்தன. சூரன்குடி பெரிய நாடார் என்ற நண்பர் குமரி மாவட்டத்தில் வழங்கும் வழக்குச் செய்திகளை எனக்குத் தெரிவித்தார். அவை மிகவும் பயனுடையனவாக இருந்தன. குமரி மாவட்டத்தில் வேட்டுவாளி என்ற பெயர் இன்றும் பேச்சு வழக்கில் வழங்குவதாக நண்பர் பெரிய நாடார் தெரிவித்துள்ளார். மற்றும் சைவ சித்தாந்த உரையில் கூறும் 'மயிர்க்குட்டி' என்ற கம்பளிப் பூச்சியின் பெயர் 'மைக்குட்டி' என்று வழங்கப்படுகிறது. குமரி மாவட்டம் ஒரு காலத்தில் திருவாங்கூர் அரசிற்கடியில் இருந்தும் சைவசிந்தாந்தத்தைச் சார்ந்த தூய தமிழிலக்கிய வழக்குகளைப் போற்றிப் பாதுகாத்ததைப் புகாழாதிருக்க முடியாது. வேட்டுவன் என்ற பெயர் மலையாளத்திலும் வழங்குகின்றது. 'வேட்டுவன் போற்றிய புழுவைப் போல' என்ற வழக்கு மலையாளத்திலும் வழங்குவதை டாக்டர் குண்டர்ட் மலையாள மொழி அகராதியில் குறிப்பிட்டுள்ளார். வேட்டுவன் என்ற பூச்சி போற்றிய புழு என்று கூறப்பட்டிருப்பதைக் காணலாம். 'வேட்டுவன் தியானிச்சிட்டு வேட்டுவனாய் முடியுன்னு' என்ற மலையாள வழக்கு உள்ளது. இதில் புழு வேட்டுவனுதலை விரும்பி வேட்டுவனைத் தியானிச்சி வேட்டுவனாய்ப் பிறந்தது என்ற கருத்து புலப்படுகின்றது. இதில் சிவஞான போதக் கருத்து இருப்பதைக் காணலாம். சிவஞானபோதத்தில் (3) வேட்டுவனுதலை விரும்பும் புழுவிற்கு வேட்டுவன் விரும்பிய வடிவைக் கொடுக்குமாறுபோல இறைவனும் அவரவர் வேண்டுருவினைக் கொடுத்து அவ் வினைக்குத் தக்க பயன்களைக் கூட்டுவான் என்று கூறப்பட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். மலையாள வழக்கில் காணப்படும் இந்தக் கருத்து சைவ சித்தாத்தக் கருத்தாகும். ஆதலின் கேரளத்திலும் சைவ சித்தாந்தம் நாட்டுமக்களிடையே பரவியிருந்தது தெளிவாகின்றது. "வேட்டுவனும் கீடஜாலங்களே கூட்டில் அடைச்சிடும் எணைக்கென, ஆகையால் ஒரு குரு வேட்டுவன் எனிக்காகோ" என்றதொரு வழக்கு மலையாள மொழியில் உள்ளதை டாக்டர் குண்டர்ட் கூறியுள்ளார். கீடஜாலம் என்பது வடமொழியில் புழுக்களைக் குறித்ததாகும். கூட்டில் அடைத்திடும் புழுக்கள்

வேட்டுவனுகப் பிறக்க நினைத்தால் வேட்டுவனுகும் என்ற கருத்து இதில் காணப்படுகின்றதாகத் தெரிகின்றது. இந்தக் கருத்தின் படி வேட்டுவனே குருவாகக் கொள்ளப்பட்டதாகத் தெரிகின்றது. டாக்டர் குண்டர்ட் இந்த வேட்டுவன் எனும் குளவியைப்பற்றி "வெட்டாவாளன், வெட்டார்வெளியன், வேட்டாவெளியன், வேட்டாளியன் கூடும்" என்று மலையாளத்தில் மாறி வழங்கும் பெயர்களையும் குறிப்பிட்டுள்ளார். ஆங்கிலத்தில் wasp hornet என்றும் குறிப்பிட்டுள்ளார்.

முயிறு என்ற எறும்புகள் பலாமரத்தில் கூடு கட்டுவதைப் பற்றிச் சங்கநூல்கள் கூறியுள்ளன. இச் செய்தி உண்மையென்பதை வட மலையாளத்தில் நேரில் கண்டு எழுதினேன். நான் அண்மையில் மட்டக்களப்பு வசந்தன் கவித்திரட்டு என்ற நூலைப் படிக்கும்போது முயிறு என்ற சங்ககாலப் பெயர் இலங்கையில் பாடப்படும் நாட்டுப்பாடல்களில் வழங்கி வருவதைக் கண்டு வியப்புற்றேன். வசந்தன் பாட்டுக்கள் இலங்கையில் வழங்கப் படும் நாட்டுப் பாடல்களாகும்.

"பற்றி எழுந்திடு பசியால் நானும்
பாகவிலேறிப் பழம் கொய்யப் போனேன்
தொற்றியே வருகுது முயிறு – என்
றடையைத் துடையடி தோகை நல்லாரே"

—மட்டக்களப்பு வசந்தன் கவித்திரட்டு

சங்கநூல்களில் நற்றிணையிலும் (186), ஐங்குறுநூற்றிலும் (99) "பழனப் பாகல் முயிறு மூசு குடம்பை" என்ற வரியில் கூறப்பட்ட செய்தியைப் போல இலங்கை வசந்தன் பாட்டிலும் முயிற்றெறும்புகள் பாகலில், அஃதாவது பலாமரத்தில் கூடு கட்டுவதாகக் கூறியுள்ளது கவனிக்கத்தக்கது. மற்றும் தமிழகத்தில் வழங்காத இரண்டு தூய சங்கநூற்பெயர்கள் இலங்கைத் தமிழில் வழங்குவதையும் காணலாம். பாகல் என்ற பெயர் சங்ககாலத்தில் பலாவைக் குறித்தது. பகுப்பது என்ற பொருளில் பாகல் என்ற பெயர் பல பழங்களை ஒரு பெரும் பழத்தில் உடைய மரத்தைப் பற்றி வந்திருக்கலாம். பலா என்ற பெயர் பல அடங்கிய பெரும் பழத்தைத் தரும் மரத்தைக் குறித்ததாகும். தமிழ்நாட்டில் இப்பொழுது வழங்கிவரும் பாகல் என்ற பெயர் ஒரு கொடியாகும். இதன் மேலேறியும் போக முடியாது. இதன் பழத்தையும் யாரும் கொய்துண்ணப் போகார். சங்க இலக்கியத்தில் வழங்கிய முயிறு என்ற எறும்பின் பெயரும் இலங்கைநாட்டார் பாட்டில் வழங்கியிருப்பது குறிப்பிடத்தக்கது. குடியேற்ற நாட்டில் மொழி மரபுகள் சிதையாது காப்பாற்றப்படுவதைக் காணலாம். இலங்கைப் பேச்சுத்

தமிழில் தூய தமிழ் இலக்கிய வழக்குகள் பாதுகாக்கப்பட்டுள்ளதைக் காணலாம். சங்க காலத்திலேயே ஈழத்துப் பூதந்தேவனார் முதலிய புலவர்கள் வாழ்ந்தனர். ஈழ நாட்டில் சிறந்த பாடல் எழுதும் திறமைமிக்க புலவர்கள் சங்க காலத்திலேயே வாழ்ந்தனர் என்பதைப் பார்க்கும்போது அதற்கு முன்னர், சில நூற்றாண்டு களுக்கு முன்னர்த் தமிழர் இலங்கையில் குடியேறியிருக்க வேண்டு மென்பதில் ஐயமேயில்லை. சிங்களர் அதற்குப் பின் வந்தவராவர். நான் எழுதிய 'சங்க நூல்களில் மீன்கள்' என்ற நூலில் மீன் களின் பல சங்க காலத் தமிழ்ப் பெயர்கள் இலங்கைமொழியில் அப்படியே எடுத்துக்கொள்ளப்பட்டு இன்றும் சிங்களர்களின் பேச்சுவழக்கில் வழங்குவதை விளக்கியுள்ளேன். இதிலிருந்து சிங்களர் ஈழத் தமிழர்களுக்குப் பிறகு இலங்கை நாட்டில் குடியேறிய வர்கள் என்பது தெளிவாகும். நல்லூர் ஞானப்பிரகாச அடிகள் இலங்கையில் வழங்கி வரும் இடப்பெயர்களில் பலவும் தூய தமிழ்ப் பெயர்களாகவும் இலக்கியப் பெயர்களாகவும் உள்ளதை ஈழ கேசரியில் எழுதிக் காட்டினார். அதுபோன்றே இலங்கை மொழியில் மாவிடை, மரவிடைப் பெயர்கள் (Flora and Fauna) தமிழிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன.

நண்பர் பெரிய நாடார் அவர்கள் குமரி மாவட்டத்தில் முயிற் றெறும்பின் பெயரை மீறு என்றும் முசிறு என்றும் சொல்வர் என்று எழுதியுள்ளார். மலையாளத்தில் மீறு என்பது எப்படி நீறு என்று மாறியதைக் குறிப்பிட்டுள்ளேன். வட மலையாளத்தில் புளி எறும்பு என்றும் கூறுவர். இது கடிக்கும்போது வலியைத் தரும் நீர் (Formic Acid) புளிப்புச் சுவையுடையதென்பதைக் கண்டு புளியெறும்பு என்றும் கூறுவர். இதை ஒரு மருந்தாகவும் கருதுவர். "இங்கு மீறு என்றும் முசிறு என்றும் சொல்வர். இதன் மொய்க்கும் தன்மையை நான் நேரில் கண்டிருக்கிறேன். ஒரு கொல்லமாவுக்குக் காவலாக இளந்தையில் ஒரு போது இருந் தேன். அம் மரத்தில் அப்போது கட்டெறும்புகள் வாழ்ந்திருந்தன. முயிறுகள் அம் மரத்தில் குடியேறத் தொடங்கின. கட்டெறும்புகள் முயிறுகளைக் கடித்துத் துண்டுபடுத்திவிடும். கட்டெறும்புகள் தனித்தனியாகவே தாக்கும். ஆனால் முயிறுகளோ கூட்டம் கூட்ட மாக ஒவ்வொரு கட்டெறும்பையும் அதன் கால்களையும் உணர்ச்சி முடியையும் பிடித்து மரத்தோடு வைத்து அப்படியே வைத்துக் கொல்லும். இவ்வாறு அம் மரம் முழுமையும் முயிறுகள் கைப் பற்றிக்கொண்டன. ஆனால் இவற்றைக் கடிக்காத செவினி என்றோர் எறும்பு வகை மரங்களிலிருந்து துரத்தி விடுகின்றது. இஃது எவ்வாறு நிகழ்கின்றதென்று தெரியவில்லை. இச் செவினிகள் முயிற்றைவிடச் சற்றுச் சிறியவை. அதன் நிறம் இன்னும் கொஞ்சம்

அடர்த்தியாக இருக்கும்; கடிக்காது. ஆனால் இது வாழும் மரங்களில் விளைச்சல் குறையும். பூவையும் பிஞ்சுகளையும் இது வாட வைத்து விடும். முயிறு வாழும் மரங்களில் விளைச்சல் பெருகும். ஆனால் அதைக் கொய்வதுதான் கடினம். 'முயிற்றுக்கடி' என்று பெரிய நாடார் எழுதிய பட்டறிவுச் செய்தி அரிய, பெரிய செய்தி யாகும். இந்தியாவில் வாழும் பூச்சிகளையும் எறும்புகளையும் முற்றிலும் அறிவியல் அறிஞர்கள் ஆராயவில்லை. சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள அழகிய பூச்சியான மூதாயைப்பற்றிக்கூட ஆராய்ந்து அறிவியல் செய்திகளைக் கூறவில்லை. மூதாயைப்பற்றிப் பின்னர் விளக்குவேன். செவினி என்று குமரி மாவட்டத்தில் வழங்கிவரும் எறும்பின் பெயரை வடமலையாளத்தில் சில பகுதிகளில் முயிற்றெறும்பிற்கே வழங்கிவருவதையும் கேட்டுள்ளேன்.

பேச்சு வழக்குச் சொற்களையும் மரபுகளையும் இலக்கிய வழக்குகளோடு இணைத்து ஆராய்வது மிகவும் பயன்தரும். பேச்சு வழக்குகள் ஒரு மொழியின் உயிர்நாடியாகும் என்பதை உணர வேண்டும். அதனால் தமிழ்நாட்டிலும், தமிழ்பேசும் உலகமெலாம் வட்டார வழக்குகளை அறிவியல் தந்த நாடாப் பதிவுக் கருவிகளைக் கொண்டு ஆராய்ந்து முடிவுகளைக் காண வேண்டுவது இன்றியமையாதது. காலந் தாழ்த்தாது செய்ய வேண்டிய கடமையுமாகும்.

———

## விரைவு முறைப்படுத்தப்பட வேண்டும்

*அதிகமான வேகம் நீடித்த தன்மையினதாக இருக்காது என்று சொல்வார்கள். மாணவர்களிடையே வேகம் தேவை தான். அது ஏற்படுவதும் இயற்கைதான்; எனினும் அந்த வேகம் வகைப்படுத்தப்பட வேண்டும். முறைப் படுத்தப் பட வேண்டும், கல்வியின் தன்மையே வேகத்தை முறைப் படுத்தி வகைப் படுத்துவது தான்.*

**பேரறிஞர் அண்ணா**

# ஆடுதல்—சொல்விளக்கம்

[பேராசிரியர் இரா. மதிவாணன் க. மு.]

(முன் இதழ் ௫00ஆம் பக்கத் தொடர்ச்சி)

அவன் கோலத்தைக் கண்டு அனைவரும் நகையாடினர். 71. (அ) நடமாடுதல்—அங்குமிங்கும் நடத்தல்; to walk about. அவர் நோய்வாய்ப்பட்டதிலிருந்து சரியாக நடமாடுவதில்லை. (ஆ) நடம் ஆடுதல்—நடனம் ஆடுதல்; to dance. இறைவன் நடம் ஆடும் கோயில் தில்லையம்பலம். 72. (அ) நாடகமாடுதல்—நடித்தல்; to act as in a play. நன்றாக நாடகமாடுகிறாள் இவள். (ஆ) நாடகமாடுதல்—நடித்து ஏமாற்றுதல். to cheat by acting cleverly. இப்படி நாடகமாடியே என் செல்வமெல்லாம் கரைத்து விட்டார்கள். 73. நாவாடுதல்—பேச்சுக்குப் பேச்சு எதிர்த்துப் பேசுதல்; to retaliate. இப்படி நாவாடினால் எந்த மாமியார்தாம் பொறுத்துக் கொள்வாள்? 74. நிழலாடுதல்—குறிப்பாகத் தோன்றுதல; to appear like a shadow. வெற்றி பெறுவேன் என்பதற்கான அறிகுறிகள் நிழலாடுகின்றன. 75. நின்றாடுதல்—நிலை பெயராமல் சுழலுதல்; to rotate firmly fixed to a spot. பம்பரம் நின்றாடுகிறது. 76. (அ) நீராடுதல்—நீர் நிலையிலிறங்கிக் குளித்தல்; to bathe in a stagnant or running water. அவர் ஆற்றில் நீராடினார். (ஆ) நீராடுதல்—வாலாமை நீங்கக் குளித்தல்; to bathe after mensturation or child birth; மகவீன்ற அவள் இன்று நீராடினாள். (இ) நீராடுதல்—முழுக்க வியர்த்தல்; to perspire, to sweat. வெயிலில் இரைக்க இரைக்க ஓடி வந்ததால் அவர் உடம்பு நீராடிப் போயிற்று. 77. நீறாடுதல்—இடித்துப் பொடிபடச் செய்தல்; to pulverise. இருநிலக் கரம்பை படுநீறாடி (பெரும்பாண். 93). 78. (அ) நெளிந்தாடுதல்—ஒசிந்தாடுதல; to dance with graceful gesture. புதிய மணப்பெண் போல் நெளிந்தாடுகிறாள். (ஆ) நெளிந்தாடுதல்—இடை வளைய நடனமாடுதல்; to dance twisting the waist. பாம்பைப் போல் அழகாக நெளிந்தாடுகிறாள். 79. (அ) பகடையாடுதல்—சூதாடுதல் to gamble. தருமன் பகடையாடி நாடிழந்தான். (ஆ) பகடையாடுதல்—எளிதில் பணம் திரட்டுதல்; to earn by easy means; இதென்ன பகடையாடிக் கிடைத்த சொத்தா? 80. (அ) படமாடுதல்—உருவப்படம் அல்லது உருவச்சிலை இருத்தல், the presenee of idol or photo. படமாடுங்கோயில் பரமற் கொன்

நீயில் (திருமந்). (ஆ) படம் ஆடுதல்—திரையிடப்படுதல்; to screen a film; அந்தக் கொட்டகையில் என்ன படம் ஆடுகிறது? 81. படமெடுத்தாடுதல்—சீறிப்பேசுதல்; to speak with fury. அவன் ஏன் இப்படிப் படமெடுத்தாடுகிருன்? 82. பணம் ஆடுதல்—செல்வம் மிக்கிருத்தல்; to have plenty of money. அவனிடம் பணம் ஆடுகிறது. 83. பணம் கட்டி ஆடுதல்—பணத்தைப் பந்தயமாக வைத்து ஆடுதல்; to lay money as bet. சீட்டாடுவோர் பணம் கட்டி ஆடுவது தவறு. 84. பணம் விளையாடுதல்—பணம் செலவழித்து நினைத்ததை முடித்தல்; to achieve things desired by bribing. அவன் வென்றதன் காரணம் பணம் விளையாடியதுதான். 85. பந்தாடுதல்—செம்மையாக உதைத்தல். to give a severe kick. அந்தத் திருடன் கிடைத்திருந்தால் எல்லோரும் அவனைப் பந்தாடிவிட்டிருப்பார்கள். 86. பம்பரமாடுதல்—ஓய்வின்றி அலைந்து வேலை செய்தல்; to work hard without taking rest. ஒரே நேரத்தில் இத்தனை வேலை கொடுத்தால் என்ன செய்வது? என்னுல் பம்பரமாட முடியாது. 87. பாய்ந்தாடுதல்—அஞ்சத்தக்க விரைவுடன் விளையாடுதல்; to play with such speed as to frighten the opponents; சடுகுடு விளையாட்டில் அவன் பாய்ந்தாடினுல் எதிரணி தோற்பது உறுதி. 88. புகுந்து விளையாடுதல்—திறங்காட்டி ஆடுதல்; to play with remarkable skill. அந்த வேலையை அவனிடம் கொடுங்கள்; புகுந்து விளையாடி விடுவான். 89. பூத்தாடுதல்—அழகால் பொலிதல்; to shine with beauty. தாமரை பூத்தாடுகிறது. 90. பேயாடுதல்—தனக்குத் தானே வருந்துமாறு செய்தல்; to make one to feel sorry for his own faults. எனக்கொன்றும் தெரியாதென்று நினைத்திருக்கிருன். நான் அனைத்தையும் வெளிப்படுத்தினுல் அவன் பேயாடுகிருனு இல்லையா என்று பார். 91. பொடியாடுதல்—புழுதி படிதல். to be covered with dust. பொன்னுறு நறுமேனி பொடியாடிக் கிடப்பதோ (சிலப். 19-40) 92 (அ) போராடுதல்—தொடர்ந்து சண்டையிடுதல், இடைவிடாமல் முயலுதல்; to struggle continuously, to work hard restlessly, to achieve the object. எத்தனைக் காலம்தான் போராடுவது? போராடாமல் நலம் விளையுமா? (ஆ) போராடுதல்—மல்லுக்கு நிற்றல், தொடர்ந்து வம்புச் சண்டைக்கு நிற்றல்; to argue unnecessarily; உன்னேடு போராட என்னுல் முடியாது. 93. மஞ்சாடுதல்—வெண்மேகம் தவழ்தல்; white cloud seen above the hills or mountain. மலைமேல் மஞ்சாடுகிறது. 94. மல்லாடுதல்—விடாப்பிடிச் சண்டையிடுதல்; to quarrel wantonly. அவனோடு மல்லாட யாரால் முடியும்? 95. மாலாடுதல்—கயிற்றைப் பிடித்துத் தொங்கியவாறு

ஊசலாடுதல்; to swing by gripping the rope with one hand. ே டன் மலைத்தேனழிக்க மாலாடுகிறான். (ஆ) மாலாடுதல்—வட்டக்காட்சியில் விளையாட்டு வீரர் கயிற்றூசல் கம்புகளை மாறிப் பற்றிப் பாய்ந்தாடுதல்; to perform on aerial trapeze. கோமாளி கூட வட்டக் காட்சியில் வேடிக்கைக்காக மாலாடிக் கீழே விழுகிறான். 96. மன்றாடுதல்—கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுதல்; to make a humble request. தன்னை மன்னிக்குமாறு மன்றாடினான். 97. மாறாடுதல்—மாறான கருத்தைக் கூறுதல்; to speak opposing a doctrine. இந்தக் கொள்கைக்கு அவன் சார்பாக இருப்பான் என்று நினைத்தோம். ஆனால் அவனே மாறாடுகிறான். 98. மூச்சாடுதல்—உயிரிருத்தல்; to breathe gently to show presence of life. அவன் இறக்கவில்லை, இன்னும் மூச்சாடுகிறது. 99. வழக்காடுதல்—வழக்குத் தொடுத்தல்; to file a case. உன்மீது வழக்காடப் போகிறேன். 100. வளையாடுதல்—மங்கலமாதல்; to become auspicious. வளையாடுங் கையால் உணவுண்ண வேண்டும். 101. வளைந்தாடுதல்—இசைந்து செல்லுதல். ஒத்துப் போதல், to consent. உன் விருப்பத்துக்கு என்றால் வளைந்தாட முடியாது. 102. வாயாடுதல்—தொடர்ந்து பேசித் தீர்த்தல்; to go on speaking to one's own satisfaction. என்னதானிருந்தாலும் இப்படி வாயாடக் கூடாது. 103. வாலாடுதல்—பலரிருப்பவும் வேண்டுமென்றே தான் முந்திச் செய்தல்; to carry out a work not wanted by; தலையாடுமுன்னே வாலாடுகிறது பார்த்தாயா? 104. வீம்புக்கு ஆடுதல்—தன் இயலாமையை வெளிக்காட்டிக்கொள்ளாமல் செயற்படுதல்; to do a work concealing one's inability. அந்தப் பயல் வீம்புக்கு ஆடுகிறான். அந்த வேலை அவனால் முடியாது. 105, வேடங்கட்டி யாடுதல்—திறமையாகப் பொய்த்து நடித்தல்; to act with talent. நீ என்னதான் வேடங்கட்டியாடினாலும் இங்கு ஒன்றும் நடக்காது. 106. வேண்டுமென்றே ஆடுதல்—வம்புக்கிழுத்தல்; to indulge in a quarrel wantonly. நான் சும்மாயிருந்தாலும் அவன் வேண்டுமென்றே ஆடுகிறான்.

ம.க.தெ. கோத. குட. ஆட். துட. ஒடு து ஆடுவி நாய். ஆர் கோண். அடு

[ஆல்—ஆள்—ஆலு—ஆடு (ஒ. நோ. நீள்—நீரு—நீடு) ஆல்—சுற்றுதல், சுழலுதல், ஆல்—ஆள் = செயற்படல், செய்தல், அசைதல். ஆள்—ஆளு—ஆடு = செய். அசை, நடுங்கு, வினையாற்று, விளையாடு.]

ஆள்—முதனிலைத் தொழிற்பெயர், தொழிலாகு பெயராய்ச் செயலையும், செய்வாரையும் உணர்த்தும் பெயராகி வரும். ஆள்—ஆளு—மேற்பார்—ஆட்சி செய். ஆளு—ஆடு' செயற்படுத்து, வினைக்கொள் எனப் பிறவினையாயும், செய், இயங்கு எனத் தன் வினையாயும், வழங்கும். 'ஆளு' தன்வினையாயும் 'ஆடு பிறவினை யாயும் பண்டு வழங்கினும், 'ஆடு' பிறவினைப் பொருளிழந்து தன்வினைப் பொருளில் வழக்கூன்றியதாகல் வேண்டும். 'கொள்' தன்வினைப் பொருளிலும் 'கொடு' பிறவினைப் பொருளிலும் தத்தம் பொருளிழவாமல் இன்றும் வழங்குதலை ஒப்பு நோக்குக.

———

## பேராசிரியர் மறை. திருநாவுக்கரசு அவர்களின் பவள விழா

மறைத்திரு மறைமலையடிகளாரின் மைந்தரும், கடந்த 55 ஆண்டுகளாகத் தமிழ்த்தொண்டும், சிவத்தொண்டும், நாட்டுத் தொண்டும் ஆற்றிவருபவருமான பேராசிரியர் மறை திருநாவுக் கரசு அவர்கட்கு அகவை 75 நிறைவை முன்னிட்டுப் பவள விழாக் கொண்டாடத் தமிழ் அன்பர் பலர் முடிவு செய்து அதற்கென ஒரு குழுவினை அமைத்துள்ளனர்.

இப் பவளவிழா 23—8—81 அன்று மாலை சென்னை, பெரம்பூர் தொடர்வண்டி நிலையத்திற் கண்மையிலுள்ள அன்ன தான சமாச மண்டபத்தில் ஆட்சிமொழிக் காவலர் உயர்திரு. கி. இராமலிங்கனர் தலைமையில் நடைபெறும். அதுபோது இப் பேராசிரியர் அவர்கட்குப் பொன்னுடை போர்த்திப் பொற்கிழி வழங்கத் திட்டமிட்டுள்ளனர். எனவே, அவர்தம் தொண் டினைப் பாராட்டும் வகையில் பொருள் உதவி அளிக்க விழை வோர், அதனைக் கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்பிவைக்கு மாறு விழாக்குழுவினர் கேட்டுக்கொள்கின்றனர்.

நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி :

டாக்டர் ஆர். சொக்கலிங்கம் எம்.பி., பி.எசு.,
சவகர் நகர், பெரம்பூர்
சென்னை-600082.




"ஐயாயிரம் ரூபாய் எடுத்துக்கொண்டு கழகத்திற்குள் சென்றால், திரும்பி வரும்போது அவ்வளவு பணத்திற்கும் புத்தகங்களாக அள்ளிக்கொண்டு வரலாம்..." என்று ஒருமுறை குறிப்பிட்டார் பேரறிஞர் அண்ணா.

அண்ணா குறிப்பிட்டுப் பேசிய கழகம்—திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

புத்தகப் பதிப்பில் அறுபது ஆண்டுகளைக் கடந்துவிட்ட கழகத்தைக் கட்டிக் காத்துவரும் ஆட்சியாளராக இருப்பவர் தமிழறிஞரான திரு. சுப்பையா பிள்ளை.

மெல்லிய உருவம்; எளிய தோற்றம்; பொக்கை வாய்ச் சிரிப்பு; தெளிவான, அதே சமயம் திட்டவட்டமான பேச்சு; தமிழுக்கு இன்னமும் செய்யவேண்டும் என்ற தணியாத தாகம்; பழந்தமிழ் இலக்கியங்களைத் தூக்கியே சிவந்த கரங்கள்; நெற்றியில் எப்போதும் துலங்கும் திருநீறு; தமிழையும், தமிழறிஞர்களையும் பற்றிப் பேச ஆரம்பித்தால் தம்மிடமிருக்கும் முதுமையைக் கழற்றி வைத்துவிட்டு இளமை மிடுக்குடன் நிமிர்ந்து உட்காரும் தோற்றம்—இவைதாம் சுப்பையா பிள்ளை.

"சின்ன வயசிலேயே அப்பா இறந்துட்டாரு; அண்ணாச்சி திருவரங்கனார்தாம் குடும்பப் பொறுப்பை ஏத்துக்கிட்டு இலங்கைக்கு வேலை தேடிப் போனார். இலங்கையில் இருந்தவாறு, மறைமலை அடிகளாரைப்பற்றிக் கேள்விப்பட்டு, அவரை

வரவழைத்துச் சொற்பொழிவாற்றுவதற்கு ஏற்பாடுகள் செய்தார். அடிகளார்க்குப் பல நூல்கள் வாங்கித் தந்த அண்ணாச்சிக்கு அப்போதே தாமும் நூல்களை வாங்கிச் சேகரித்து ஒரு நூல் நிலையம் ஆரம்பிக்க வேண்டும் என்ற எண்ணம் வந்துவிட்டது....

"அதன் எதிரொலியாகத்தான் அண்ணாச்சி தம் பெயரையும், தம் நெருங்கிய நண்பரொருவர் பெயரையும் இணைத்துத் 'திருசங்கர் கம்பெனி' என்ற பெயரில் புத்தக வணிக நிலையமொன்றைக் கொழும்பிலே தொடங்கினார்... பிறகு இலங்கையைவிட்டுத் திருநெல்வேலி திரும்பிய அண்ணாச்சி, சென்னையில் பவழக்காரத் தெருவில் 'திருசங்கர் கம்பெனி'யைத் தொடர்ந்து நடத்தினார். பிறகுதான் அருட்செல்வர் தி. செ. விசுவநாத பிள்ளை அவர்களின் தூண்டுதலால், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தொடங்கப்பெற்றது. பங்கு ஒன்றுக்கு ரூ. 10 வீதம் 5,000 பங்குகளுக்கு ரூ. 50,000 மூலதனம் ஏற்படுத்தப் பட்டது. விசுவநாத பிள்ளை 10 ரூபாய் பெறுமான நூறு பங்குகள் எடுத்து, தாமே ஆரம்பித்து வைத்தார்'' என்றார் சுப்பையா பிள்ளை.

கழகம் ஆரம்பித்த புதிதில், ஓர் அறை எடுத்துக் கொண்டு, தாமே சமைத்துச் சாப்பிட்டுவிட்டு, பங்குகள் சேர்ப்பதற்காக, சுப்பையா பிள்ளை சைக்கிளில் இரவு பகல் பாராமல் தாம் சுற்றிய அந்தக் கஷ்டமான காலத்தைப்பற்றித் தெரிவித்தார். அதே போல, கிடைக்கப் பெறாத அரிய பல பழந்தமிழ் நூல்கள், அறிஞர் களின் மடல்கள், கையெழுத்துப் படிவுகள், படங்கள், வரலாற்றுக் குறிப்புக்கள் ஆகியவற்றையெல்லாம் தேனீ போலச் சேகரித்து வெளியிட்டவர் சுப்பையா பிள்ளை. அண்ணன் திருவரங்கனாரும் அப்படியே. அவருடைய சட்டை பெரிதாக இருக்குமாம். அந்தச் சட்டையில் மூன்று பெரிய பைகள். அந்த மூன்று பைகளிலும் தமிழ் நூல்கள், புரூஃப்கள் எப்போதும் நிரம்பி வழியுமாம்.

நூல்கள் வெளியிடுவதில் புதுமையும் கண்டவர் சுப்பையா பிள்ளை. ஷேக்ஸ்பியரின் 'ஒதெல்லோ' நாடக நூலை உறவினர் ஒருவர் காட்ட, பிள்ளை அதைப் பார்த்து வியந்து போனார். காரணம், அந்த நாடக நூல் கைக்குள் அடங்கும்படி மிகச் சிறிய தாக இருந்தது. இதை மனத்தில் ஏற்றிக்கொண்ட பிள்ளை, டாக்டர் மு. வவை அணுகித், திருக்குறளுக்கு மூன்று வரிக்குள் உரை எழுதித்தர வேண்டுமென்று யோசனை கூறி, அதன்படி கையடக்கத் 'திருக்குறள் தெளிவுரை'யைப் பதிப்பித்தார். இன்று அந்தக் கையடக்கத் 'திருக்குறள் தெளிவுரை' இல்லாத இடமில்லை

என்றுமளவுக்குப், பத்து லட்சத்திற்கு மேற்பட்ட பிரதிகள் விற்றிருக்கின்றன.

கழகத்திலிருந்து வெளியாகும் நூல்களின் முக்கிய சிறப்பு, பிழையில்லாமல் வருவது. மெய்ப்பு (புரூஃப் என்பதை 'மெய்ப்பு' என்றுதான் சொல்கிறார்) பார்ப்பதில் பிள்ளை புலி. ஏற்கெனவே மூலப்படியுடன் (Original manuscript) ஒப்பிட்டுக் கழகப் புலவர்களால் மெய்ப்பு ஒருமுறை சரிபார்க்கப்படும். பிறகு நூலாசிரியர் பார்ப்பார். எவ்வளவு பேர் எத்தனை முறை பார்த்தாலும், இறுதியாகத் தாம் ஒருமுறை மெய்ப்பு பார்க்காமல் எந்த நூலையும் அச்சிட விடமாட்டார் சுப்பையா பிள்ளை. இந்த வழக்கம் இப்போதும் நடைமுறையில் இருக்கிறது. இரவு நேரங்களில்கூட, படுக்கையில் அவர் மெய்ப்பு திருத்துவதை இன்றும் காணலாம்.

'திருவடிப் புகழ் மாலை'யில் முதலில் ஆரம்பித்த கழக வெளியீடு, இன்றைக்கு 1,770 நூல்களைத் தாண்டிவிட்டது.

தமிழையும் சைவத்தையும் இரு கண்களாகக் கொண்டு சங்க இலக்கியப் பேழை, தமிழர் சமய இலக்கியப் பேழை, பிற்கால இலக்கண இலக்கியப் பேழை, பள்ளி மாணவர் பல்வகை நூற்பேழை—என்று பேழை பேழையாக நூல்களைப் பதிப்பித்துத் தந்து கொண்டேயிருக்கும் கழகம், தமிழ் வளர்ச்சிக்காகப் பல மாநாடுகளையும் நடத்தியிருக்கின்றது.

மறைமலையடிகளின் உயிலின்படி, லிங்கிசெட்டித் தெருவில் 'மறைமலையடிகள் நூல் நிலையம்' ஏற்படுத்தியதும், பல்லாவரத்தில் அடிகளார் வாழ்ந்த வீட்டை 'மறைமலையடிகள் கலை மன்றம்' ஆக்கியதும் கழகத்தின் சாதனைகளாகும்.

எண்பத்தைந்து வயதாகப் போகும் பிள்ளை, அலுவலகத்துக்கும் அச்சகத்துக்கும் வந்து இளமைத் துடிப்போடு இன்றும் செயல்படுவதன் இரகசியம்?

சுப்பையா பிள்ளை காப்பி சாப்பிடமாட்டார்; கிண்டி ரேஸ் எப்படி இருக்கும் என்றே தெரியாது; அரட்டை அடிக்கத் தெரியாது; சீட்டாடத் தெரியாது; சினிமா பார்த்தது கிடையாது; உணவு விஷயத்தில் மிகவும் கண்டிப்பு; காலையில் இரண்டு இட்லி, மத்தியானம் கொஞ்சம் மோர் சாதம்; மாலையில் இரண்டு இட்லி, நடுவில் ஒரு டம்ளர் ஹார்லிக்ஸ்; திருமண வீடுகளுக்குச் சென்றால் சாப்பிடமாட்டார்.

நன்றி—ஆனந்த விகடன் 19—'7—81

# பிரான்மலை குடைவரைக்கோயில்

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்

இணைப்பதிவாளர், தனி அதிகாரி, திருநெல்வேலி மத்திய கூட்டுறவு வங்கி (வரையறை); திருநெல்வேலி]

கடையெழு வள்ளல்களில் ஒருவனும், முல்லைக்குத் தேர் ஈந்தமையால் கொடைமடம் உடையவன் எனப் புகழப்படுபவனுமான பாரிவள்ளலைப்பற்றிச் சங்க இலக்கியமான புறநானூற்றில் 16 பாடல்கள் உள்ளன. மேலும் ''கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினுங் கொடுப்பார் இலை'' எனச் சுந்தரரால் சிறப்பிக்கப் பெற்றவன். இவன் ஆண்ட பறம்புநாடு இன்று பிரான் மலை எனப்படுகின்றது. தேவார காலத்தில் இது திருக்கொடுங்குன்றம் என அழைக்கப்பெற்றது. இது சம்பந்தப்பெருமானால் பாடப் பெறும் பேறு பெற்றது. இராமநாதபுரம் மாவட்டம் சிங்கம்புணரியினின்றும் பொன்னமராவதி செல்லும் வழியில் இவ்வூர் உள்ளது.

இங்குள்ள கோயில் பூமி, அந்தரம், சுவர்க்கம் என மூன்று பகுதிகளாகப் பேசப்படுகின்றது. பூமியில் கொடுங்குன்றீசுரரும், குயில் அமிர்தநாயகியும் அருள்பாலிக்க, அந்தரத்தில் பயிரவர் எழுந்தருளியுள்ளார். சுவர்க்கத்தில் மங்கை பாகனும் தேனம்மையும் கோயில் கொண்டுள்ளார்கள்.

''மயில்புல்குதண் பெடையோடுடன் ஆடும் வளர் சாரல்
குயிலின்இசை பாடுங்குளிர் சோலைக்கொடுங் குன்றம்''

என்றெல்லாம் இங்குள்ள இயற்கைக் காட்சிகளை ஆளுடைய பிள்ளையார் தமது பதிகத்தின் சொல்லோவியமாகத் தீட்டிக், கொடுங்குன்றீசுவரரையும் குயில் அமிர்தநாயகியையும் பாடிப் பரவுகின்றார். அந்தரத்தில் உள்ள பைரவர் தம் ஊர்தியாம் நாயுடன் 4 கைகளுடன் காணப்படுகின்றார். முன் வலக்கையில் டமாரம், முன் இடக்கை மற்றும் பின்வலக்கை ஆகியவற்றில் பாம்பு, பின் இடக்கையில் மண்டையோடு ஆகியவை உருவாக்கப்பட்டுள்ளன.

பாறையில் கிழக்குநோக்கிக் கருவறை குடைந்து அமைக்கப் பெற்றுள்ளது. ஏனைய குடைவரைகளைப் போன்று இங்குத் தூண்கள் மற்றும் அரைத்தூண்களைக்கொண்ட முகப்பு இல்லை. விமானம் வட்டமாக உள்ளது. கருவறையை அடுத்து அந்தராளம், அர்த்த மண்டபம், முகமண்டபம், தெய்வசபை ஆகியவை உள்ளன. அந்தராளத்தின் இருபுறங்களிலும் ஆண்வாயிற்காப்-

போருக்குப் பதிலாக இரு பெண் வாயிற்காப்போர் உருவாக்கப் பட்டுள்ளனர். ஏனைய குடைவரைகளினின்று இதில் ஒரு மாறுதல் காணப்படுகின்றது. தெய்வ சபையின் மேற்கட்டில் தேவர்கள் புதை சிற்பங்களாக உருவாக்கப்பட்டுள்ளனர். பாரிவள்ளல் ஆண்ட பறம்புநாடு என்பதற்கேற்ப அவனது செப்புப்படிமமும் உள்ளது.

கருவறையின் உள்ளே மங்கைபாகரும் தேனம்மையும் காணப்படுகின்றனர். இருவரும் இரு கைகளுடன் உருவாக்கப் பட்டுள்ளனர். மேலும் இருவர் வடிவங்கள் சுதையாலானவை. அண்ணல் இடக் கையைத் தொடைமீது வைத்து, வலக் கையில் மழுவை ஏந்தியுள்ளான். நல்லிருக்கையில் அமர்ந்துள்ள அவன் கடகம், கேயூரம் ஆகிய அணிகலன்களை அணிந்துள்ளான். தலையில் சடாமகுடம் முற்றுவெண்திங்களுடன் காணப்படுகின்றது. அம்மையின் இடக் கையில் செங்கழுநீர்ப்பூ இருக்க, வலக் கை தொடைமீது உள்ளது. வீர இருக்கையில் (வீராசனத்தில்) அமர்ந்துள்ள அவள் கரந்த முடி அணிந்துள்ளாள். முகம், வயிறு, மார்பு போன்றவை இயற்கை எழிலுடன் அமைந்துள்ளது கண்டு இன்புறத்தக்கதாம்.

கருவறைக்குச் சற்றுத் தள்ளி உள்ள தெய்வ சபையில் தேவர்கள் உருவாக்கப்பட்டிருப்பதாலும், கருவறைக்கு இருபுறமும் பெண் வாயிற்காப்போர் இருப்பதாலும் இது கல்யாணவடிவம் என்று சொல்வது இங்கு வழக்கத்தில் இருந்துவருகின்றது. ஆகம விதிகளின்படி திருமணவடிவில் சிவனும் உமையும் நின்ற திருக் கோலத்தில் இருக்கவேண்டும். மலைமகளுக்குப் பின்னால் அலை மகளும், பூமகளும் இருக்கச், சிவனுக்கு அருகில் திருமால் நீரிட்டு வழங்க (தாரைவார்க்க) குடத்துடன் காணப்படவேண்டும். நான்முகன் அரியோம்பலின் முன் அமர்ந்திருக்க வேண்டும். இங்கோ எனில் சிவனும் உமையும் மட்டுமே உட்கார்ந்து காணப்படுவதால், இது திருமணவடிவன்று. அம்மையும் அப்பனும் அருகருகே அமர்ந்துள்ள இந்த வடிவம் உமையோடு கூடிய வடிவமாகும்.

இங்குள்ள கோயிலில் இரண்டாம் பாண்டியப் பேரரசைத் தோற்றுவித்த மாறவர்மன் முதலாம் சுந்தரபாண்டியத் தேவன், பாண்டிய மன்னர்களான சடாவர்மன் முதலாம் சுந்தரபாண்டியன், மாறவர்மன் முதலாம் குலசேகரத்தேவன், விசயநகர மன்னன் வீரப்புகழ் பெற்ற கிருட்டிணதேவப் பேரரசன் ஆகியோரின் கல்வெட்டுக்கள் காணக்கிடைக்கின்றன. இவற்றில் கிருட்டிண தேவராயர் கல்வெட்டினின்றும் அவர் ஈழநாட்டை வென்றதாகத் தெரியவருகின்றது. இம் மன்னனின் வேறு கல்வெட்டுக்களில் இந்தச் செய்தி இல்லை என்று சொல்லப்படுகின்றது.

இக் கோயிலிலுள்ள 13 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டினின்றும் எட்டுவட்டை இடைவெட்டைகளில் திசை விளங்கு திசை ஆயிரத்து ஐந்நூற்றுவரி, ஏறுசாத்து இறங்கு சாத்து திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர் ஆகிய வணிகக் குழுக்கள் இருந்தமை தெரிகின்றது. அவை திருப்பணி, திருமேற்பூச்சு ஆகிய கோயிலின் பல்வேறு பணிகளுக்குச் சில சுங்க வரிகளை வழங்க இந்தக் கோயிலில் ''நிறைவுற நிறைந்து குறைவறக்குடி அமைப் பேசி, இசையச் செய்தமையும்'' தெரிகின்றது. அதில் உப்பு, நெல், இரும்பு, குதிரை, யானை போன்றவற்றிற்குச் சுங்க வரி விகிதங்கள் குறிக்கப்பெற்றுள்ளன. இதினின்றும் இவர்கள் தமிழ் மூதாட்டியான ஔவையார் வாக்கிற்கிணங்கத் திரைகடலோடி யானை, குதிரை, முத்து, வைரம் போன்ற பொருள்களை வாணிகம் செய்து பொருள் ஈட்டியமை தெரிகின்றது. தற்காப்பிற்காகப் படை நிறுவியதுடன், அளவற்ற கொடை அறங்களையும் செய்துள்ளனர். அக்கால வணிகக் குழு அமைப்பினை அறிய இந்தக் கல்வெட்டு பேருதவியாக உள்ளது.

தமிழகத்தில் குடைவரைக்கோயிலின் தோற்றம் 7 ஆம் நூற்றாண்டாகக் கொள்ளப்படுகின்றது. மேலும் இங்குள்ள இறையின் திருவுருவங்கள் சுதையால் செய்யப்பட்டனவாம். வழிபாட்டுக்குரிய இறையின் உரு முன்னாளில் மரம் அல்லது சுதையால் செய்யப்பட்டது. பல்லவப் பேரரசர்களாள பரமேசுவரவர்மன் மற்றும் இராசசிம்மன் காலத்தில்தான் கருவறையின் பின் சுவரில் இறையின் திருவுரு சுதை சிற்பமாக உருவாக்கப் பெற்றது. எனவே இந்தக் குடைவரையின் காலத்தை 7 ஆம் நூற்றாண்டாகக் கருதலாம்.

———

## தனித்தியங்கும் தமிழ்

'தமிழ்' என்னுஞ் சொல்லுக்குத் 'தமி' என்பது பகுதி. (தமி-தனித்தது) 'ம்' என்னும் சிறப்பெழுத்து சேர்ந்து 'தமிழ்' அமைந்தது.

—அழகரடிகள்

# ஆட்டுத் தேவர்

[மயிலம், ஆ. சிவலிங்கனர்,

ஆய்வாளர்-உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20.]

ஆட்டுத் தேவர்தம் விதியொழித் தன்பால்
ஐயனே என்றுன் அருள்வழி யிருப்பேன்
நாட்டுத் தேவரும் நாடரும் பொருளே
நாத னேயுனைப் பிரிவுறு அருளைக்
காட்டித் தேவநின் கழலிணை காட்டிக்
காய மாயத்தைக் கழித்தருள் செய்யாய்
சேட்டைத் தேவர்தம் தேவர் பிரானே
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

இப் பாடல் மாணிக்கவாசகரின் திருவாசகத்தில் செத்திலாப் பத்தின் ஐந்தாம் பாடலாம். இதன் முதல் வரியின் பொருள், "ஆட்டுத் தேவரின் ஆணைவழிப்படி நடப்பதை விட்டு ஐயனே என்று சொல்லிக்கொண்டு உன் அருள்வழி நடப்பேன்" என்பதாம். ஆட்டுத் தேவர் என்பதற்குப் பலவாறு பொருள் கூறுவர். சைவப் பெரியார் மு அருணைசலம் பிள்ளை யவர்கள், 'திருவாசகம்—ஆராய்ச்சிக் குறிப்பு' என்னும் தம் நூலில் அப்பொருள்களைத் தொகுத்துப் பின்னர்த் தம்பொருளை யும் விளக்கினர். அவர்கள் தொகுத்த பொருள்களாவன :

1. "ஆட்டுத்தேவர்—இறைவனல் ஆட்டப்பட்ட தேவர் அவர் மும்மூர்த்திகள் முதலாயினோர்" —சோளிங்கபுரம் சிவ-அருணகிரி முதலியார்.

2. "வினைக்கேற்ப என்னை ஆட்டுவிக்கின்ற தேவர்" கள்—கா. சுப்பிரமணிய பிள்ளை. விளையாட்டுத் தேவர், பொய்த்தேவர் என்ற பொருளும் உண்டு என்பர் அவர்.

3. "அசைவை உண்டாக்கிப் பார்வை மனம் பிராணன் ஆகிய இவைகளுக்கு அந்த அசைவைக் கொடுக்கும் சக்திகள்" —சுந்தரமாணிக்க யோகீசுவரர்.

4. (அ) ஆட்டுத்தன்மை வாய்ந்த தேவராகிய பிரம ஞதியர்.

(ஆ) ஆடுபோலத் தமக்கென்று தனித்ததோர் அறிவின்றி ஒன்றன வழியே ஒன்று சென்று மாயும் தன்மையுடைய தேவர்கள் ; ஆடுபோன்ற தேவர் ஆட்டுத் தேவர்.

(இ) ஆட்டுத் தலையையுடைய தேவர்; ஆட்டுத் தலையைப்பெற்ற தக்கன் முதலிய பிரமர்களும் உபபிரமர்களும்.

(ஈ) ஊழை நுகர்விக்கும் பிரமன் முதலியோர்.

(உ) இறைவன் ஆட்டுவித்தால் ஆடும் தேவர்கள்.—குருவருள் விளக்கம் என்ற பெரிய திருவாசக உரைப்பதிப்பு, திருவாவடு துறையாதீன வெளியீடு.

இப்பொருள்களை யெல்லாம் ஏலாது பிள்ளையவர்கள் தனிப் பொருள் காணுகிறார்கள். "ஆட்டுவிக்கும் ஐம்புலன்கள்'' என்பது அவர்கள் கண்ட பொருள்.

'தேவ' என்ற சொல் வடமொழியில் 'புலன்' என்ற பொருளில் உபநிடதங்களில் வழங்கப்படுகின்றதென்றும், காட்டாக முண்டகோபநிடத்தின் மூன்றும் முண்டகம் முதல் காண்டம் எட்டாம் மந்திரத்திலும், மூன்றும் முண்டகம் இரண்டாம் காண்டம் ஏழாம் மந்திரத்திலும் 'தேவ' என்று வரும் சொல் புலன்களைக் குறிக்கும் என்றும், அதனுல் முண்டகோபநிடத்தின் அறிவு கொண்டு பார்த்தால் 'ஆட்டுத் தேவர்' என்பது, 'ஆட்டுகின்ற புலன்களைக் குறிக்கும்' என்றும் அவர்கள் கூறினர்கள்.

முண்டகோபநிடத்தில் புலன்களைக் குறிக்கத் 'தேவ' என்ற சொல் காணப்படும் ஓர் ஒற்றுமையைக் கொண்டு 'ஆட்டுத்தேவர்' என்பது புலன்களைக் குறிக்க வந்தது என்று கூறுவது வலிந்து கூறுவதாகும்.

மேற்பாடலில் ஆட்டுத்தேவர், நாட்டுத்தேவர், சேட்டைத் தேவர் எனத் தேவர் மூவர் குறிக்கப்பட்டுள்ளனர். அதனுல் மூன்றும் வரியில் உள்ள 'காட்டித் தேவ' என்பதும் அடைமொழியோடு ஒரு தேவர் குறிக்கப்பட்டிருக்கவேண்டும் என நாம் கருதலாம். அவ்வாருயின் 'காட்டித் தேவ' என்பதற்குப் பதிலாகக் 'காட்டுத்தேவ' என்பது இருக்கலாம் என எண்ணலாம்.

தேவர் என்ற சொல் கடவுளையும், விண்ணகத்துப்பிரமன் முதலிய தேவர்களையும், மண்ணகத்து அரசர்களையும், அடியவர்களாகிய அந்தணர்களையும் குறிக்கும்.

அரசர்கள் தேவர் எனப்படுவர்கள். அரசர் பெயரில் தேவன் என்ற சொல் சேர்த்தே வழங்கியிருந்தனர் என்பதை இராசராச தேவன், இராசேந்திர சோழ தேவன், குலோத்துங்க சோழ தேவன் எனக் காணப்படும் பெயர்கள் அறிவிக்கும்.

'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே' என்னும் தொடர் வழக்கும் காணலாம்.

அடியவராம் அந்தணர்களைப் பூவுலகத் தேவர் என்பர். (அந்தணர் சாதிப் பெயரன்று.) கண்ணப்ப தேவநாயனார், நக்கீர தேவநாயனார் முதலிய பெயர்களைக் காணலாம்.

எனவே ஆட்டுத்தேவர் என்பது அரசர்களையும் நாட்டுத் தேவர் என்பது அடியார்களாம் அந்தணர்களையும் குறிக்கும் எனலாம். சேட்டைத் தேவர் என்பது விண்ணுலகத் தேவரைக் குறிக்கும் (சேட்டை-தொழில் செய்தல், சிறுமைக் குணம், குறும்பு முதலிய பல பொருள் ஒரு சொல்லாயினும் தத் தமக்கு விதித்த தொழில் செய்யும் தேவர் எனப் பொருள் கொள்ளலாம்).

உலகை ஆளுவதன் மூலம் ஆட்டுபவர் அரசர் ஆதலின் அரசர் ஆட்டுத் தேவர் எனப்படுவர். (ஆட்டுதலைச் செய்பவர் ஆட்டுத் தேவர்.)* 'ஆட்டுத் தேவர் விதி' என்றது அரசர் ஆணையைக் குறிக்கும். மாணிக்கவாசகர் பாண்டியனின் அமைச்சராயிருந்து அவன் விதித்த வழி நடந்தவராதலின், 'இனி, யான் அரசர் விதிவழி நடத்தலை யொழிந்து உன் அருள் வழியிருப்பேன்' என்றார். "அப்படி அருள்வழியிருந் தாலும் பழவினைவயத்தால் வரும் உடம்பைப்பற்றிய மாயத் தைக் கழிப்பாயாக; அதற்கு உன் அருளையும் கழலிணை யையும் காட்டுக" என்றார். மேலும் அவர், "சேட்டைத் தேவர்தம் தேவராகிய பிரமன் முதலிய பெருந்தேவர்க்குத் தேவன் நீ; அவர்களை அழித்துத் தனித்திருக்கும் நீ காட்டுத் தேவன்" என்றார். காடு-சுடுகாடு. இறைவன் சுடுகாட்டுள் ஆடுவான் ஆதலின் காட்டுத் தேவனாவான்.

இந்நிலையில் மேற்பாடலின் பொருள் வருமாறு:

"திருப்பெருந்துறை மேவிய சிவனே! சேட்டைத் தேவர்தம் தேவர் பிரானே! காட்டுத்தேவனே! நாட்டுத் தேவராலும் தேடற்கரிய பொருளே! நாதனே! ஆட்டுத் தேவர் தம விதிவழியொழித்து அன்போடு ஐயனே என்று உன் அருள்வழி யிருடடேன். அதனால் உன்னைப் பிரிதல் இல்லாத அருளையும் கழலிணையையும் காட்டிக் காய மாயத்தைக் கழித்தருள் செயவாயாக".

———

*ஆட்டுத் தேவர் எனத் தகர ஒற்று மிக்கிருத்தலின் ஆட்டுகின்ற தேவர் என வினைத்தொகையாகக் கொள்ளுதல் இல்லை.

# சாமகானம்தான் அனைத்திந்தியாவின் தொன்மைப் பண்ணு?

[பாவலர் வீ. ப. கா. சுந்தரன்,

இறையியல் கல்லூரி, மதுரை.]

அனைத்து இந்தியாவின் மிகத் தொன்மையான பண் சாம கானம் என்று பி. சாம்பமூர்த்தி தம் நூலில் கூறியுள்ளார். [தென் னிந்திய சங்கீத நூல் V பாகம் (1977) ப. 70]. இவர் சாமகானம் இன்றுள்ள கரகரப் பிரியாவிற்கு ஒப்பாகும் என்றும் கூறியுள்ளார்; ஆனால், உ. வே. சாமிநாத ஐயர் சாமகானம் என்பது விளரிப் பண் எனக் குறித்துள்ளார். இனி, ஓ. கோசாமி எனும் இசை ஆய்வு மேதை, கனகாங்கியே சாமகானம் என்று கூறியுள்ளார்.[1] எனவே சாமகானம் எது என்று மூன்று பெரியார்களும் வேறு வேருகக் கூறியுள்ளனர். இவர் தத்தம் முடிவுக்குக் காரணங்கள் வரிசையாய்க் கூறி நிறுவவில்லை. மேலும் ஒருவர் முடிவை மற்றவர் மறுக்கவும் இல்லை. இவற்ருல் நாம் அறிவது என்ன? சாமகானம் என்பதைப்பற்றி மூவரும் தத்தம் போக்கில் கூறி யுள்ளாரே யன்றிச்—சான்றுகள் காட்டி நிறுவவில்லை என்பது தெளிவு.

மேலும், பி. சாம்பமூர்த்தியார்—கரகரப் பிரியாவினின்றும் கிரகபேதம் பண்டைக்காலத்தில் செய்தது போன்றும் மேற்படி நூலில் கூறியுள்ளார். சாமகானம் எது என்று உறுதிப்படுத்தாத நிலையே இருந்துவருகின்றது. பின்னர் எப்படி கிரகபேதம் செய்து பிற ஆறு பண்களைக் கண்டுபிடித்தனர் என நிறுவ இயலும்? கிரகபேதம் கரகரப் பிரியாவினின்றும் செய்தனர் என்பதற்கும் சான்றுகள் தருதல் வேண்டாவோ? சாமகானம் ஓர் இறங்குநிரல் பண் (அவரோகண ராகம்) என்பர். ஆனல் வேதகாலத்து யாழை ஏறுநிரல் (அரோகண) கருவி என்பர். ஏறுநிரல் கருவியைப் பயன்படுத்திஞல், ஏறுநிரல் பண்ணே ஆதியில் கிட்டியிருக்கும். வேதகால இசையில், கோவைகள் (சுவரங்கள்) மகரி ச நி த ப என்று இறங்கு நிரலில் அமைந்திருந்தது என்பர். இந்தக கோவைகளை யாழ் கண்டுபிடித்த பின்னர் யாழின் நரம்பொலி களினின்றும் சட்டக்கிரமம் (குரல் முதல் வரிசை) கண்டுபிடித்துப் பயின்றனர் எனக் கொள்ளல் வேண்டும்.

---

1. The Story of Indian Music by O. Goswami. Asia Publishing House (1957). P. 9.

இனி, வேதகால இசையில் மூன்று சுவரங்கள் இருந்தன என்பார்கள். ''உதாத்தா'' என்பதன் பொருள்—உயர்ந்த சுவரம். ''அநுதாத்தா'' என்பதன் பொருள்—தாழ்ந்த சுவரம். இந்த இரு சுவரங்களை வைத்துத்தான் தொடக்கத்தில் வேத மந்திரங்கள் ஓதப்பட்டன. இவ்வாறு வேதம் ஓதிய காலம் 'கதா' என்பர். அடுத்த காலத்தில் மூன்று சுவரங்கள் கண்டுபிடிக்கப்பட்டன என்பர்.

ஆதிகாலத்தில் ரிக்வேதம் ஒரே ஒரு சுரத்தில் பாடப்பட்டதாம். (1500—50 வரை தோரியமாய்) எனவே ஒருசுவரப் பாட்டை ஒருவகையில் உரைநடைப் பேச்சு என்றுகூடச் சொல்லி விடலாம். இந்த ஒற்றைச் சுவர ஓதுதல் காலத்தை 'அர்ச்சிகா' என்றனர். இரட்டை சுவர ஓதுதல காலத்தைக் 'கதா' என்றனர். உதாத்தா, அநுதாத்தா, சுவரிதா எனும் மூன்று சுவரங்களில் ஓதிய காலத்தை 'சமிக்' என்று கூறினார்கள்.

இனி இங்குச் சுட்டப்பட்ட ஒலிகள்—உயர்ந்தது, தாழ்ந்தது, இடையது எனப் பொருள்படுவனவே. ஏழு சுவரங்களில் இந்த மூன்று ஒலிகளின் சுவரங்கள் எவை? சிலர், 'ம. ப. ச' என்றும் வேறு சிலர், 'ப ரி. ச.' என்றும் வேறு சிலர் 'நி. ச. ரி.' என்றும் நூல்களில் கூறியுள்ளனர். (கோசுவாமி) மேலும் இந்த மூன்று சுவரங்களைப் பற்றி ஆராய்ந்தவர்கள் தெளிவான திட்டமான சான்றுகள் கூறி நிறுவிவிடவில்லை. ஒருவர்க்கு ஒருவர் முரண்படுகின்றனர். ஒருவர், மற்றவரைக் காரணங்காட்டி மறுத்துத் தம் கோள் நிறுவவில்லை. எனவே மூன்று சுவரங்கள் எவை என்று அறுதியிட்டுக் கூறுவதற்கு இயலவில்லை. உயர்ந்தது, தாழ்ந்தது, இடையது என்று ஒலிகளின் தன்மையைச் சுட்டிய பெயராகையால் சுவரங்களைக் கூறிவிட இயலவில்லை. பலரும் தத்தம் போக்கில் சுவரங்களைக் கூறியுள்ளனர். எந்த ஓர் ஆதிமனிதன் பாட்டிலும் குரலிலே ஒலியிலே உயர்வும் தாழ்வும் இருப்பது இயற்கைதானே? சுவரங்களைப்பற்றிய தெளிந்த அறிவு ஏற்பட்ட பின்னர் மக்கள் சுவரங்களைக் கூறலாயினர். சுவர அறிவு இல்லாத காலத்தில் உயர்ந்த ஒலி தாழ்ந்த ஒலி இடை ஒலி எனக் குறித்ததினின்றும் மிகத் தொன்மையான குறிப்புகள் உதாத்தா அநுதாத்தா முதலியன என அறியலாம்.

இனி, வேதகாலத்தவர்கள், சுவரங்களின் பிறப்புக் கூறும் போது வருணதேவனிலிருந்து மத்யமும், சூரியதேவனிலிருந்து பஞ்சமும், பூமிதேவியிலிருந்து சட்சமும் பிறந்ததாகக் கூறியுள்ளனர். இதனின்றும், ஆதியில் சுவரங்கள் பிறப்புப்பற்றி—இசை நரம்புகளின்வழிப் பிறப்பதைப் பற்றி அவர்கள் அறியவில்லை

என்று அறிகின்றோம். வெறும் புராணக் கதைகளையே கூறி விளக்கினர்கள் என அறியலாம். சுவர அறிவு படிப்படியாய் வளர்ந்த காலத்தில்—சட்சம். ரிடபம் முதலிய காரணப் பெயர்களை இட்டனர். முதலில் தோன்றிய சுவரம்—'ம' என்றும், இரண்டாவது தோன்றிய சுவரம் 'ப' என்றும், மூன்றாவது தோன்றிய சுவரம் 'ச' என்றும் கூறியுள்ளதாக. ஒ. கோசுவாமி எழுதியுள்ளார். இவற்றால் நாம் அறிவன:—(1) 'ம உ 'ச' எனும் சுவரங்களுக்கு இடையில் பெரும் இடைவெளிகள் இருந்தன, (2) இறங்கு நிரலில் சுவரங்கள் தோன்றின; (3) சட்சத்தை முடிவு சுவரமாகக் கொண்டனர். (4) ச, ரி, க, ம, ப, த, நி ஆகிய ஏழு சுவரங்களின் பெயர்களும் ஒரே வகைக் காரணத்தால் பெயர் பெறவில்லை. மத்திமம்—பஞ்சமம்—இடத்தால் பெயர் பெற்றன. 'ரி' காளை ஒலியால் பெயர் பெற்றது. இவ்வாறு ஏழ் சுவரங்களும் ஒரே ஒழுங்காகப் பெயர் பெறவில்லை; இந்தப் பெயர்கள் படிப்படியாய்ப் பல்லாண்டு இடைவிட்டு இடப்பட்டன எனலாம். ஆறு சுவரங்களால் தோற்றுவிக்கப்பட்ட சுவரம் 'சட்ஜம' என்பதினின்றே, இறங்கு முறையில் சுவர வரிசைகள் ஆதியில் வடநாட்டில் தோன்றின என்றும் அறியலாம். இனி இவ்வாறு சுவரங்கள் தோன்றியமைக்கு முரணாகத் தென்னிந்திய சுவரங்கள் தோன்றியுள்ளன என்பதைத் தமிழ்ப் பெயர்களே நன்கு நிறுவுகின்றன. வாலாற்றை ஆராய்ந்து கூறும்போது—"வட இந்தியா, தென்னிந்தியாப் பிரிவு கூறுகிறான்," "பிரிவு மனப் பான்மையன்," என்று குற்றம் சாட்டக் கூடாது. ஒற்றுமை என்ற போர்வை போர்த்துக்கொண்டு—பசுவும் எருமையும் ஒன்று தான் என்று கூறிவிடலாமா? ஒற்றுமையை நிலைநாட்ட அவ்வாறு கூறலாமா? ஆராய்ச்சியில் காணுகின்றதை உள்ளதை உள்ள வாறே கூறுதல் வேண்டும். வேறு வேறாக அமைந்துள்ளமையைக் கூறிவிட்டால்—உடனே பகைத்துவிட்டதாகப் பொருளா? ஒற்றுமை மனப்பான்மை குலைந்துவிடுமா? ஆணும் பெண்ணும் வேறாக இருந்தால் ஒன்றுபட்டு வாழ முடியாதா? ஆணும் ஆணும் தான் ஒன்றுபட்டு வாழமுடியுமா? எனவே வடஇந்தியா சுவரத் தோற்றத்திற்கும் தமிழகச் சுவரத் தோற்றத்திற்கும் வேறுபாடு உண்டு என்று அறிதல் ஆராய்ச்சி காட்டுவதே. அனைத்து இந்தியக் கோவைத் தன்மைகளில் ஒருமைப்பாடு உண்டு என்பதையும் அறிந்துகொள்ளுவோம். இனி வேறுபாடுகளை முறையே அறிவோம்.

(1) தமிழிசையில் அடிப்படைக் கோவையை (சுவரத்தை) முதலில் வைத்து, அதனினின்றும் பிற கோவைகளைக் கண்டு பிடித்தனர். (ச—ம; ச—ப; ச—த—போல்) (2) தமிழிசையில்

ஏறு நிரலில் கோவைகளைக் கண்டு அமைத்தனர். (8) முதன் முதலில் குரல் இளி முறையில் (ச. ப.) கோவைகளைக் கண்டு பிடித்த முறையைச் சிலம்பு விளக்குகின்றது.

**குரல் இளி (ச—ப) முறையில் கண்டுபிடித்த கோவை = சுவரம்.**

1. குரல்—இளி = ச—ப
2. இளி—துத்தம் = ப—ரி
3. துத்தம்—கைக்கிளை = ரி—த
4. கைக்கிளை—விளரி = த—க.

எனவே இவை :—ச ரி[2] க[2] ப த[2] ச் எனும் ஆறு கோவையாகும். இவ்வாறு, குரல் இளி முறையில் தமிழர்கள் முதன்முதல் கண்டுபிடித்த பண் முல்லைப் பண் (மோகனம்). இதனைச் சிலம்பு தெளிவாக்குகின்றது. (ஆய்ச் : 18).

குரல் துத்தம் முதலிய ஏழு கோவைப் பெயர்களே—கோவைகள் கண்டுபிடித்த முறையை விளக்குகின்றன. (அ) (1) 'குரல்'—அனைத்து சுவரங்களையும் தன்னுடன் இணையச் செய்வது என்னும் பொருளது. (குரவை—கையை இணைந்து ஆடுவது.) (2) 'துத்தம்'—சற்று உயர்ந்தது என்னும் பொருளது. (துதி—உயர்த்திச் சொல்) (3) கைக்கிளை—சற்றுக் குறைந்த ஒலிப்பு உறவு உடையது. (கை—சிறுமை; கிளை—உறவு) (4) 'உழை'—நட்பாகி நிற்பது (உழை—பக்கம்); (5) 'இளி'—இணைவது. (6) விளரி—மென்மையது. (7) தாரம்—மிக உச்சமானது.* இவ்வாறு ஏழு கோவைகளும் தன்மையால் பெயர் பெற்றன. (ஆ) ஏழும் ஏறு நிரலில் எழுவன; இவற்றிற்கு அடிப்படை—குரல். (இ) குரலுடன் மிகமிக ஒன்றுபட்டு இணைவதால் இணை அல்லது இளி எனப் பெயர் பெற்றதினின்றும்—ஆதியில்—கோவைகள் இணையும் முறைமையைத் தெள்ளத் தெளிவாய் உணர்ந்து இருந்தனர் என்றும், இணை, நட்பு, கிளை என்னும் ஒத்திசை முறைகளை அறிந்து பெயரிட்டனர் என்றும் அறியலாகும். (ஈ) குரல் இணை முறையிலே நரம்புகளைக் கட்டி ஒலித்துப் பார்த்துக் கோவைகளைக் கண்டு, பிரித்து வரிசைப்படுத்தினர்கள். (உ) குரல் இணை முறையில் முதன்முதல் கண்டுபிடித்த பண்—முல்லைப் பண். கோவைகளைச் சந்திரன் சூரியன் உற்பத்தி செய்த கற்பனைக் கதைகள் சிலம்பில் இல்லை; பாட்டிலும் தொகையிலும் இல்லை.

---

* முன்னர் செந்தமிழ்ச் செல்வியில் ஏழிசைப் பெயர்க் காரணம் வ. சுப்பையாப் பெரியாரின் பவள மலரில் விரித்துரைக்கப்பட்டுள்ளது.

I மாறுமுதல் பண்ணலுக்குத் தமிழில் பல்வேறு பெயர்கள் மிகத் தொன்மைக் காலந் தொட்டே தமிழ்ச்சொல்லில் அமைந்திருப்பது தமிழிசைக்கு ஒரு தனிச் சிறப்பு ஆகும்; மேலும் அப் பெயர்கள் தமிழர்கள் பண்ணுக்கும் முறையில் தேர்ந்திருந்தமையைத் தெரிவிக்கும். பெயர்கள் வருமாறு :— குரல் குரலாகப் பண்ணுதல், பண்ணுப் பெயர்த்தல், குரல் இளிக் கிழமை செய்தல், பட்டடை பண்ணுதல், பண்ணுதல், ஆராய்தல்—முதலிய பல்வேறு தொடர்கள் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, சிலப்பதிகாரம், பழம் இசை நூல்கள்—முதலியவற்றில் காணப்படுகின்றன.

II மாறுமுதல் பண்ணுதல் எனும் தொடர் சேக்கிழார் பெரிய புராணத்தில் அமைந்துள்ளதால்— அம் முறை அவர் காலம் வரை தோடர்ந்து வந்தமை அறியலாகும்.

III பண்ணுப் பெயர்த்தல் முறைகள் பலபல வகையாகப் பண்டைத் தமிழில் இருந்தன. (அ) குரல் குரலாகப் பண்ணுதல், அல்லது வலமுறைத் திரிபு. (ஆ) இடமுறைத் திரிபு. (இ) இளி முறைத் திரிபு. (ஈ) வம்புறு மரபில் செம்பாலை ஆக்குதல் போன்றவை, இன்னும் சில நுண்ணிய முறைகளும் கூறப்பட்டுள்ளன. இத்துணை அளவிற்குப் பண்ணுக்கும் முறைகள் பண்டைக் காலத்தில் வேறு நாடுகளில், வேறுமொழிகளில் விரிவாக இருந்தமையை ஆங்கில இசைப் பேரகராதிகள் கூறவில்லை.

வடமொழியிலும் இத்தனை பண்ணுக்கும் முறை வகைகள் தொன்மைக் காலத்து இருந்ததாக—வடமொழி இசை இலக்கணம் கூறும் ஆங்கில நூல்களில் யாண்டும் காணப்படவில்லை. எனவே — பண்டைக்காலத்தில் — பைந்தமிழிசையில் — பண்ணுக்கும் முறையும் வகையும் விரிவாக வழங்கியமை அறியலாகும்.

இனி—சாமகானம்பற்றி அறிவோம். பி. சாம்பமூர்த்தி ஐயர், சாமகான இராகம் இந்திய முதற்பண் என்று கூறியுள்ளார். பிற பண்களுக்கு அடிப்படைப்பண் சாமகானம் என்றும், அதனின்றே சட்சகிரமம் தோன்றியது என்றும் கூறியுள்ளார்.

பழந்தமிழிசை நூலார்—எக்காலத்திலும்—கரகரப் பிரியாவை அடிப்படைப் பண்ணாகக் கொள்ளவே யில்லை. தமிழிசை ஆய்வில் தேர்ந்தவர்கள் மூவர்—(1) ஆபிரகாம் பண்டிதர் இசைத்தமிழ் ஆய்வுக்கு அகரம் ஆகியவர் (2) விபுலானந்தர்—இசைக் கணித நிபுணர். (3) எஸ். இராமநாதன் முல்லைப் பண் ஆய்வாளர். இவர்கள் மூவருமே—கரகரப் பிரியாப் பண்ணை அடிப்படைப் பண்ணாகத் தமிழர்கள் கொண்டனர் என்றும் தம் அரும்பெரும் ஆய்வு நூல்களில் யாண்டும் கூறினரில்லை.

பழந்தமிழிசை வழக்கில்—செம்பாலையாகிய அரிகாம்போதியே அடிப்படைப் பண் எனக் கூறினர்கள் என்பதைச் சிலம்பு தெள்ளத் தெளிய விளக்கியுள்ளது. எனவே தமிழரின் ஆதி அடிப்படைப் பண்—அரிகாப்போதியே என்றும்; குரல், துத்தக் கோவை (சுவர) முறைகள் தமிழுக்கே உரியவை என்றும் அக் கோவைகளி னின்றும் குரல் இளி முறையில் தோன்றிய பண் முல்லைப் பண் என்றும் தெளிவாய் அறியற்பாலன. சாமகானம் எது என்ற ஆய்வு நடந்துகொண்டே உள்ளது. கருத்து வேறுபாடுகள் உண்டு. இந் நிலையில்தான் இந்தியாவின் தொன்மைப் பண் என்றும் அடிப்படைப் பண் என்றும் பலரும் கூறி வருவது எந்த அளவிற்குப் பொருந்துவது ?

———

## ‘செந்தமிழ்ச் செல்வி’ ஆண்டுக் கையொப்ப அறிக்கை

சீரிய தமிழ்மொழி ஏடான ‘செந்தமிழ்ச் செல்வி’ ஆண்டுதோறும் தமிழன்னைக்குப் புத்தம் புதுச் சிலம்புகளைப் படைத்து வருகின்றாள். சிலம்பிலே உள்ள பரல்கள் அனைத்தும் மாணிக்கக் கற்கள். தமிழ் மொழியின் சீரையும் சிறப்பையும் நன்கு விளக்கும் கட்டுரை மணிகள் பரவ ஏடுகளை நாளிதழ் திங்களிதழ் என்று வாடாத மலர்களின் இதழ் களுடன் ஒப்பிடுகின்றோம். தமிழில் அன்று தோன்றி அன்றே வாடி உதிரும் இதழ்கள் பல இன்று மூகிழ்க்கின்றன. நாளிதழ் தோன்றிய காலைப்பொழுதிலேயே கருகிவிடுகின்றது. கிழமை இதழ் கிழமை தொடங்கி ஓரிருநாட்களிலேயே வாடிவிடுகின்றது. இவையனைத்துமே மக்கள் விரும்பிப் படிப்பது இதைத்தான் என்று உறுதி செய்துகொண்டு வணிக நோக்கம் ஒன்றை மட்டுமே கருத்தில் கொண்டு கண்ணைக் கவரும் வண்ண மகளிரின் ஓவியங்களையும் கருத்தை இழிவுபடுத்தும் கதைகளையும் வெளியிட்டு வருகின்றன.

இச் சூழலில் ஐம்பது ஆண்டுகட்கு முன்பு தோன்றிய இதழ் இன்றைக்கும் அறிஞர்களிடையேயும் ஆய்வாளர்கள் இடையேயும் பெரிதும் நாடப்பெறும் பொருளாக இலங்குவது இதழுக்கும் மொழிக் கும் சிறப்புத்தானே? அத்தகைய சிறப்புடைய ‘செந்தமிழ்ச் செல்வி’ இதழின் 56 ஆவது சிலம்பு வருகின்ற ஆவணித் திங்களிலிருந்து ஒலிக்க இருக்கின்றது. இலக்கியம், இலக்கணம், சமயம், அறிவியல், வரலாறு போன்ற பலதுறைகளில் எழும் கட்டுரைமணிகள் பரல்களாக ஒலிக்கும். சிலம்பு சிலம்பச் செந்தமிழ் அன்பர்களின் ஒத்துழைப்பு வழக்கம்போல் தொடர்ந்து தேவை. தாள் விலையும், அச்சுக்கூலியும் அளவு கடந்து ஏறிவிட்ட நிலையில் ‘செல்வியின்’ ஆண்டுக் கட்டணத்தை ரூ. 16 ஆக உயர்த்தியுள்ளோம். வாழ்நாள் கட்டணம் ரூ. 150/ ஆகும். தொடர்ந்த தங்கள் ஒத்துழைப்பினால் துணிந்து மேல் செல்கின்றோம். நன்றி.

ஆசிரியர்.

## ரசிகமணி டி. கே. சி. நூற்றாண்டு விழா

இலக்கிய இன்பத்தை நுகர்வதென்பது எளிய செயலன்று. கவிதைக்கலை மிக நுண்ணிய கலை. அதன் நயத்தை அனுபவிப்ப தென்பது அதைவிட நுண்மையான கலை. சங்ககால மன்னர் களும் இடைக்கால வள்ளல்களும் புலவர்களைப் போற்றிப் பரிசும் பாராட்டும் அளித்தனர் என்று காண்கின்றோம். ஆனால் அவர்கள் செல்வச் செருக்கினால் அவ்வாறு செய்தார்களா? அல்லது புலவர் களின் வறுமையைப் போக்க அவ்வாறு செய்தார்களா என்று தெரியாது. உண்மையிலேயே அவர்களுடைய பாடல்களின் பயன் தெரிந்து அவற்றின் ஓசை நயத்தையும் பொருள் நுட்பத் தையும் புரிந்து போற்றினார்களா என்று தெரியவில்லை. தமிழ்ப் பாடல்களை அவற்றின் நயத்திற்காக மட்டுமே படித்துப் படித்து, பக்கமிருந்தோர் கேட்கச் சுவைபட எடுத்து விளக்கி விளக்கி அவற்றின் சுவையில் மூழ்கித் திளைத்த ஒரே பேரறிஞர், ரசிக மணி திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள்தாம்.

சிலர் தமக்குள்ளே படித்து மகிழ்வர். ஒரு சிலர் மெல்ல வாய் விட்டுத் தனியாக இருக்கும்போது படித்துக் களிப்பர். வேறு சிலர் இலக்கியக் கூட்டங்களில் பாடல்களைப் பாடிக்காட்டி அவற்றின் சுவையை விளக்குவர். ஆனால் தாம் படித்து, தம் பக்கத்திலிருந் தவர் கேட்டு ரசிக்கும்படி உரக்கப் படித்து, அதன் சுவையை ஓசை நயத்துடன், தாள பாவத்துடன் பாடி மகிழ்ந்து தாமும் மயங்கி, தம்மைச் சுற்றியிருந்தவர்களும் தலைகளசைய ஒருவகை இன்பக் கிறக்கத்தில் ஆழ்ந்து போகுமாறு செய்து, அந்த இடத்தைவிட்டு நீங்கிய பின்னும் அதையே மீண்டும் மீண்டும் நினைக்கச்செய்து, மறுபடியும் அந்த இடத்திற்குப் போய்க் கவிதையின்பத்தை நுகர மாட்டோமா என்று ஏங்கச்செய்து வாழ்ந்து மறைந்தவர் ‘ரசிகமணி’ அவர்கள்.

தமிழ்நாட்டில் பல்லாயிரக் கணக்கான புலவர்கள் தோன்றி யுள்ளனர். ஆனால் அவர்கள் பாடிய பாடல்களைச் சுவைத்து மகிழ ‘ரசிகமணி’ ஒருவரேதாம் தோன்றினார். அவரைப்போல் கவிதையைச் சுவைத்து மகிழ்ந்தவர்கள் அவர்க்கு முன்னுமில்லை; பின்னுமில்லை. அவர் தாம் சுவைத்தது மட்டுமன்றித் தம்முடன் சேர்ந்து சுவைக்க ஒரு திருக்கூட்டத்தையே வைத்திருந்தார். அதற்கு ‘வட்டத் தொட்டி’ என்ற சுவையான பெயரும் உண்டு. அத்துடன் அவர் எந்த ஊருக்குச் சென்றாலும் அவருடைய கவிதை விளக்கத்தைக் கேட்க ஆர்வமிக்க அன்பர்கள் உடனே குழுமி

விடுவார்கள். அவர் தாமே பாடுவார். இசையுடன் பாடக்கூடியவர் கிடைத்துவிட்டால் அவர்களை இசையுடன் பாடச்சொல்லிக் கேட்டு மகிழ்வார். ஆடல் தெரிந்தவர்கள் கிடைத்துவிட்டால் அங்கே ரசிகத் தன்மைக்கு எல்லையே இராது. இயல், இசை, கூத்து ஆகிய முத்தமிழுமே முழக்கமிடும்.

அவர் ரசிப்பதற்குக் கம்பன் கவிதைதான் வேண்டுமென்பதில்லை. ஊர் பெயர் தெரியாதவர் பாடல் கிடைத்துவிட்டால்கூடப் போதும். உயிரோட்டமுள்ள பாடல் என்றால் அதற்கும் 'கம்ப மரியாதை'தான். பாடலைச் சுவைக்க நேரம் காலம் என்பதில்லை. இரவு இரண்டு மணியானாலும் சரி, உண்ணும் கலத்தின் முன் கைகழுவாத நிலையிலிருந்தாலும் சரி, ஓடும் இரயில் வண்டியாயினும் சரி, கவிதையைச் சுவைப்பதற்கே முதலிடம்!

கவிதையைச் சுவைப்பதற்கு நல்ல இனிய சூழ்நிலை தேவையென்பதில்லை. மகனைப் பறிகொடுத்த துன்பமிக்க சூழ்நிலையாயினும் மகனைப்பற்றிய ஒரு பாடல் கிடைத்துவிட்டால் போதும். மகன் மறைந்துவிட்ட துக்கத்தையே மறந்துவிட்டுப் பாடலைப் படித்து ரசிக்கத் தொடங்கி விடுவார். தாம் ரசிப்பதுடன் நில்லாது துன்பத்தில் ஆழ்ந்திருக்கும் மற்றவர்களையும் சுவைக்கச் செய்வார். அவரன்றோ உண்மையிலேயே 'ரசிகமணி!'

சங்கப் பாடல்களிலிருந்து இக்காலத் தங்கப் பாடல்கள் வரை தமிழர்கள் படித்து மகிழ்ந்துள்ளனர். அவர்கள் அவற்றைப் பாட்டு நயத்துக்காகப் படித்தார்களா அல்லது பொருட்சுவைக்காகப் படித்தார்களா என்று தெரியாது. கம்பராமாயணத்தைத் தமிழர்கள் பக்திச் சுவைக்காக மட்டுமே படித்து வந்தனர். அந்நிலையில் கம்பன் காவியத்தைக் கவிநயத்திற்காகத் தமிழ்மக்களைப் படிக்கச் செய்தவர் 'ரசிகமணி!'. கம்பனைச் சுவைக்க மாவட்டங்கள்தோறும் 'கம்பன்கழகங்கள்' தோன்றக் காரணராக இருந்தவர் அவர். கம்பனைக் கவிநயத்திற்காக மட்டுமே பிற சமயத்தினரும் படிக்கத் தூண்டியவர் அவர். சமயப் பிடியிலிருந்து கம்பன் கவிக்கு விடுதலை பெற்றுத் தந்தவர் அவர். கம்பன் பாடல்களையே தம்முடைய சுவையுணர்வால் தேர்வு செய்து 'கம்பன் உண்மையாகப் பாடிய பாடல்கள் இவை' என்று கம்பர் தரும் மணிகளைத் தனியே எடுத்துக் காட்டியவர் அவர்.

கம்பன் பாடல்களுடன் நின்றுவிடாது முத்தொள்ளாயிரத்தையும் குற்றாலக் குறவஞ்சியையும் இன்னும் பலர் பாடல்களையும் தமிழ் மக்களிடையே பரப்பியவர் அவர்.

'செவி'க்கு முதலிடம் கொடுத்து ஓசையின் அடிப்படையில் தான் தமிழுக்குப் புதிய புணர்ச்சி இலக்கணம் வகுக்க வேண்டும், என்று புதிய புணர்ச்சி விதிகளைப் படைத்துக் காட்டியவர் அவர்.

அவர் படைத்த இலக்கியங்களில் அழியாத இலக்கியம் கடித இலக்கியமாகும். கடிதம் எழுதுவதை ஒரு கலையாகக் கொண்டவர் அவர். மறைந்த தமிழறிஞர் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கட்கு எழுதிய கடிதங்களும், டாக்டர். ஜஸ்டிஸ் மகராஜன் அவர்கட்கும் அவருடைய அன்புத் தமக்கையார் அவர்கட்கும் எழுதிய கடிதங்களும் அழகிய நூல்கள் வடிவில் வெளிவந்துள்ளன. ஜஸ்டிஸ் அவர்களும் அவருடைய தமக்கையாரும் 'ரசிகமணி' அவர்களுடன் சேர்ந்து இலக்கியச் சுவை நுகர்வதில் தலைசிறந் தவர்கள். இவர்களைப் போல் சுவைப்பவர்கள் பக்கத்தில் இல்லாது போனால் ரசிகமணி அவர்களால் நல்ல கவிதையைச் சுவைக்கவே முடியாது. இவர்கள் அருகிலில்லாதபோது ரசிகமணி அவர்கள் நல்ல கவிதையைப் படித்துவிட்டால் தமக்கு ஏற்பட்ட உணர்ச்சிக ளனைத்தையும் இரவில் எந்த நேரமானாலும் உட்கார்ந்து நீண்ட கடிதமாக எழுதிவிடுவார்கள். இவ்வாறு எழுதப்பெற்ற கடிதங் களே நூல்வடிவில் தொகுக்கப்பெற்றுள்ளன.

குற்றால அருவி கொட்டும் அழகைத் தமிழ்மக்களுக்கு எடுத் துரைத்த பெருமை ரசிகமணி அவர்களையே சாரும். குற்றால அருவியையும் ரசிகமணி அவர்கள் வீட்டுப் பௌர்ணமி நிலவு போன்ற வட்டவட்டத் தோசையையும் வட்டத் தொட்டி அன்பர்கள் தம் வாழ்நாளில் என்றுமே மறக்க மாட்டார்கள். செவிக்குணவு இல்லாதபோதுதான் வயிற்றுக்கு உணவு ஈயப்படவேண்டும். ரசிகமணி அவர்கள் வீட்டிலோ செவியின்பத்திற்குக் குறைவே கிடையாது. அதனால் அத்துடன் போட்டி போட்டுக்கொண்டு வருகைதரும் அனைவருடைய வயிற்றுக்கும் சுவையான உணவு கிடைக்கும். பல நேரங்கள் அறுசுவையுணவு உண்ணும்போதே அழகுத் தமிழ்க் கவிதையின் சுவையும் சேர்த்து வழங்கப்பெறும். இலக்கியச் சுவைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்ந்த ரசிகமணி டி. கே. சி. புகழ் நீடு வாழ்க. அவர்தம் நூற்றாண்டு விழா பொலிவுடன் சிறக்கட்டும்.

———

# கயமனார் பாடல்கள் — ஒரு நோக்கு

[செஞ்சொற்கொண்டல், தமிழாகரர் முனைவர் சொ. சிங்காரவேலன்
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.]

பாடல் தொகை

கயமனார் பாடியுள்ள சங்கப்பாக்களின் எண்ணிக்கை 23; அவற்றுள் புறப்பொருள்பற்றிய பாடல் ஒன்று மட்டுமே; அது புறநானூற்றுள் 234ஆவது பாட்டாகச் சேர்க்கப்பட்டுள்ளது; பொதுவியல் திணையில் முதுபாலைத் துறையாக அமைந்தது அது. எஞ்சிய பாடல் தொகையும், பனுவல் அமைப்பும் வருமாறு :

| | |
|---|---|
| அகநானூறு | 12 |
| குறுந்தொகை | 4 |
| நற்றிணை | 6 |
| | 22 |

இவற்றுடன் முற்குறிப்பிடப்பெற்ற புறப்பொருள்பற்றிய பாடலையும் சேர்க்கக் கூடுதல் எண்ணிக்கை இருபத்து மூன்றாதல் காணலாம்.

கூற்றுவகை :

இவற்றுள் மகட்போக்கிய செவிலித்தாயின் கூற்றாக 9 பாடல்களும், நற்றாயின் கூற்றாக 2 பாடல்களும், தோழியின் கூற்றாக 4 பாடல்களும், தலைமகன் கூற்றாக 1 பாடலும் அமைந்துள்ளன. இவற்றைக் கூர்ந்து நோக்குங்கால், 'உடன் போக்குப்' பொருளோடு தொடர்பு உள்ளவையாகவே அனைத்தும் திகழ்வதைக் காண முடிகின்றது. அனைத்தும் தாய் மனத்தின் அன்பினை எடுத்துக்காட்டுவனவாகவே உள்ளன. முதுபாலைபற்றிய புறப் பாட்டும்கூட ஓர் அன்னையின் நிலைகுறித்துக் கூறி இரங்குவதாகவே முடிகின்றது.

ஒரு நினைவு:

இப் பாடல்கள் அனைத்தின் பொருள் அமைப்பையும் கூர்ந்து ஆராயும்போது புலவரின் தனி வாழ்விற்கும் இவர் பாடு -

பொருட்கும் ஏதேனும் தொடர்பு இருக்குமோ என்றுகூட நினைக்கத் தோன்றுகின்றது.

**பாடல் பாடுபொருள் : அவலமே**

உடன்போக்கில் மகளைப் பிரிந்த பின்னை, சுரத்திடைத் தேடிச் செல்லும் செவிலி, அங்கு நவ்வியைக் கண்டு நவிலுவதாக அமைந்த அகப்பாட்டினுள், அதனிடம் தன் அவலம்பற்றிப் பேசுகின்றாள் :

''வலைகாண் பிணையிற்போகி ஈங்கோர்
தொலைவில் வெள்வேல் விடலையொடு என்மகள்
இச்சுரம் படர்தந் தோளே'' (அகம்-7)

என்கின்றாள்.

தன் அன்பு மகள் 'சிறிய பேரறிவு வாய்க்கப் பெற்ற செல்வி' (சிறுமுதுக்குறைவி) பாலைவழியில் எவ்வாறு நடந்து செல்லுவாள்?

''சிறுமுதுக் குறைவி சிலம்பார் சீறடி
வல்லகொல் செல்லத் தாமே?'' (அகம்-17)

என்று புலம்புகின்றாள்.

''நலம்புனைந்து எடுத்தஎன் பொலங்தொடிக் குறுமகள்
அறனி லாளனொ டிறந்தனள்...நீரில் நீளிடை
மடத்தகை மெலியச் சாஅய்
நடக்குங் கொல்என நோவல் யானே'' (அகம்-219)

என்றும் புலம்புகின்றாள்.

''இரும்பிடி இரியும் சோலை
அருஞ்சுரம் சேறல் அயர்ந்தனென் யானே'' (அகம்-221)

என்பது அச் செவிலியின் கவலை.

இவ்வாறெல்லாம் கவலையுறும் அத் தாய் கண்டோரை வினவிக் கருத்தழியும் வகையிலும் கயமனார் கற்பனை விரிந்துள்ளது. (அகம்–275)

''என்மகள், செம்புடைச் சிறுவிரல் வரித்த
வண்டலும் காண்டிரோ? கண்ணுடை யீரே!'' (அகம்-275)

என்று உள்ளம் உருகக் கேட்டு நைகின்றாள் அந்த அன்பு அன்னை.

தன் அன்புமகள் அன்பு பாராட்டி வளர்த்த தோட்டத்து வயலைக்கொடியைப் பார்க்கும்போது, அவள் அடிமனத்துத் துயரம் பீறிட்டெழுகின்றது :

"வாடினை வாழியோ வயலை !"

என்று கூவி,

"ஆர நீரூட்டிப் புரப்போர்
யார்மற்றுப் பெறுகுவை? அளியை நீயே" (அகம்-383)

என அக் கொடி வாடிக்கிடப்பக் கண்டு, என் அன்பு மகளைப்போல உனக்கு நீர் தந்து தளிர்க்க வைப்போர் இனி யார்? என்று உளமுருக உரைக்கின்றாள். வயலைக் கொடியின் வாட்டம் நீரின்மையால் விளைந்ததே என்றாலும், தன்னைப் புரந்த அன்புடையாளைப் பிரிந்த துயரே அதன் வாட்டத்திற்குக் காரணமாம் என்று அன்னை ஒருத்தி எண்ணுவதே இயற்கை அன்றோ? அதன்வழிக் கற்பனை தோயக் கவிதை இழைத்த கயமனார் இயற்கைநெறி மாறா இன்புலவர் என்றல் மிகையன்று.

"செம்பொன்னால் செய்யப்பட்ட உண்கலத்து, பொரி கலந்த பாலை யான் ஊட்டத்தொடங்கியபோதெல்லாம், இளந்தளிர் போன்ற என் மகள் உண்ண மறுப்பவளாயிற்றே! நிழலற்ற—நீர் வறண்ட பாலைவழியில், தன் துணைவனுடன் விரைந்து நடந்து, நீரற்ற சுனைநீரை—வெயிலால் வெப்பமுற்ற கலங்கிய நீரைக் குடித்தல் கூடுமோ?" என்று முன்னும் பின்னும் எண்ணி நைகின்ற பெண்மனத்தைப் படம் பிடித்துக் காட்டக் கயமனாரையன்றி வேறு யாரே வல்லார் ?

"வெவ்வெங் கலுழி தவ்வெனக் குடிக்கிய
யாங்குவல் லுநள்கொல் தானேயேந்திய
செம்பொற் புனைகலத் தம்பொரிக் கலந்த
பாலும் பலவென உண்ணாள்;... (குறுந்தொகை 356)

பெயர்க்காரண மாண்பு :

பசுமையான இலையினின்றும் மேல் எழுந்த நெய்தற் பூ, கழியில் நீர் மிகும்போதெல்லாம், கயத்தின்கண் மூழ்கும் மகளிர்தம் கண்ணை ஒக்கும் என்று இவர் பாடுவதால் இவர் 'கயமனார்' என்ற சிறப்புப்பெயரைப் பெற்றிருக்கக் கூடும் என்று மூதறிஞர் கருதுகின்றனர். [குறுந்தொகை, டாக்டர், திரு. உ. வே. சா. பதிப்பு (1947) ப. ௬அ] தொடராற் பெயர்பெற்ற சங்கப் புலவர் பெயர்ப்பட்டியலில் சமாசப் பதிப்புச் சங்க இலக்கியத்துள் கயமனார்

பெயர் இல்லை; ஏனைய இருபத்தெழுவர் தொடராற் பெயர் பெற்றா ராக அப் பதிப்பிற் காட்டப்பட்டுள்ளனர். [சங்க இலக்கியம்— சமாசப்பதிப்பு (1940) ப. 1427]

மகளிர் கண்ணை நெய்தற்பூவிற்கு உவமை கூறும் சங்க இலக்கிய மரபு உண்டு. குளத்தின்கண் மூழ்கி எழும் மகளிர் கண்ணை அவ்விடத்துப் பூக்கும் நெய்தல் மலர்க்குக் கூறியதே இவர்க்குத் தனிச் சிறப்பு அளிப்பது என்று கூறலாம்.

**பெண்பாற் புலவர் படைப்போ?**

இவரது படைப்புக்களின் ஆழத்தையும், அவையனைத்தும் மகளிர் கூற்றாகவே (ஒரு பாடல் நீங்கலாக) வருவதையும் அப் பெண்டிர் மனத்து அவலத்தை ஏற்ற சொற்றொடர்களால் இனிது புலப்படுத்தியுள்ள செய்தியையும் நோக்கும்போது, ஒரு பெண்பாற் புலவரே இவற்றின் ஆசிரியராக இருக்கக் கூடுமோ என்ற ஐயமும் எழுகின்றது. ஆசிரியர் பெயரில் ஏதும் பாடவேறுபாடுகளும் இதற்குத் துணைசெய்வனவாகப் பதிப்புக்களில் காணப்பெறவில்லை. அப்படி ஏதேனும் புதிய சான்று கிடைக்குமாயின் ஐயத்திற்குப் பின்னணியும் தக்கசான்றுடன் இருக்கக்கூடும்.

**அவலஉணர்வும் அழியாஅழகும்:**

கயமனாரின் படைப்புக்கள் அனைத்தினூடும் இழையோடுவது அவலம்; பெண்மனத்துத் துயரம். வாழ்வின் எதிரொலி இலக்கியமாக ஆசிரியர்களால் வடிக்கப்படுகின்றது சில வேளைகளில் என்பது மெய்யாயின், கயமனாரது வாழ்வில் பெரும்பங்கு கொண்ட அவலமே அப் படைப்புக்களில் அடிப்புலமாக நிற்கின்றது என்று கொள்ளலாம். அடிப்புலம் அவலமே ஆயினும், அதன் விளைவு ஆகிய கவிதைகள் 'அழியா அழகுடன்' விளங்குகின்றன. ["Poetry is a mirror which makes beautiful that which is distorted" – Shelley, "A Defence of Poetry", Win stanleg (Ed), 1911, P. 15] ஆம்; கயமனாரின் கவிதைக் கண்ணாடிகள் அனைத்தும், அவல உணர்வை அழகு ஓவியங்களாக்கும் திறம் பெற்றுத் திகழ்கின்றன.

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## திரு. மீ. ப. சோமு அவர்கட்குத் தமிழ்ப் பண்பாட்டு மைய இயக்குநர் பொறுப்பு

திரு. மீ. ப. சோமசுந்தரம் (சோமு) அவர்கள் அனைத்து இந்திய வானொலியில் நீண்டகாலம் பணியாற்றிய பின் அண்மையில் ஓய்வு பெற்றார். அவருடைய ஆட்சித்திறனையும் இலக்கியப் புலமையையும் உணர்ந்த தமிழக அரசு அவரைத் தமிழ்ப் பண்பாட்டு மையத்தின் இயக்குநராக ஓராண்டுக்கு அமர்த்தியுள்ளது. உலகத் தமிழ்ச் சங்கம், தமிழ்ப் பல்கலைக் கழகம், தமிழ்ப் பண்பாட்டு அருங்காட்சியகம் அமைக்கும் பணிகளை அவர் மேற்கொண்டுள்ளார். வாழ்க அவர்தம் அரும்பணி.

## கோ. வடிவேல் செட்டியார் நினைவு நாள்

தென்கலை வளர்ச்சி மன்றத்தின் சார்பில் கடந்த 25—7—81 அன்று, சென்னைக் கந்தகோட்ட மெத்தை விழா மண்டபத்தில், மறைந்த வேதாந்த சீலரும், தமிழறிஞருமான கோ. வடிவேலு செட்டியார் அவர்களின் நினைவுநாள் கொண்டாடப்பெற்றது. கூட்டத்திற்கு முன்னாள் சென்னை மாநகரத் தந்தை திரு. கே. என். சீனிவாசன், பி. ஏ., பி. எல்., தலைமை தாங்கினார். துணைச் செயலாளர் திரு. மா. சு. சம்பந்தன் தமது வரவேற்புரையில் வடிவேல் செட்டியாரின் வேதாந்த அறிவு, தமிழ்ப்புலமை, அவராற்றிய தொண்டுகள் பற்றி விரிவாகப் பேசினார். அடுத்து "வடிவேலு செட்டியாரின் வாழ்க்கையும் தொண்டும்" என்னும் பொருள் குறித்து டாக்டர் மோ. அ. துரையரங்கனாரும் 'வேதாந்தமும் இன்றைய உலகமும்' என்னும் பொருள் பற்றி டாக்டர் இரத்தின சபாபதி அவர்களும் உரையாற்றினர். திரு. ஊ. செயராமன் நன்றி கூறினார்.

## நக்கீரர் கழகம்—திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி

நக்கீரர் கழகத்தின் சார்பில் சென்னைப் பவழக்காரத் தெரு ஏ. ஆர். சி. மகளிர் பள்ளியில் மாலை வேளையில் நடைபெற்றுவரும் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியின் தமிழ் வகுப்புகள், பி. லிட்; தமிழ் முதுகலை ஆகிய வகுப்புகள் 6-8-81 அன்று திரு. அரு. சங்கரலிங்கம் பி. எசி., அவர்கள் தலைமையில் தொடங்கப்பெற்றது. டாக்டர் பொற்கோ அவர்கள் வகுப்புக்களைத் தொடங்கி வைத்துப் பாராட்டுரை வழங்கினார்.

## டாக்டர் ஆறு அழகப்பன் பிறமொழி ஆய்வு மன்றத்தின் இயக்குநரானார்

மொழி ஆய்வு மையத்தின் தமிழ்ப் பிரிவின் இயக்குநராக, அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் இணைப் பேராசிரியர் டாக்டர் ஆறு அழகப்பன் சென்னையில் உள்ள தமிழ், வடமொழி, பிற இந்திய மொழிகளின் ஆய்வு மையத்தில் தமிழ்ப் பிரிவின் இயக்குநராக அமர்த்தப் பட்டுள்ளார். தமிழ் மற்றும் இந்திய மொழிகளின் தோற்றம், வளர்ச்சி, இலக்கணம், வரிவடிவம், ஒருமைப்பாடு இவற்றை ஆராயவும், ஆரிய திராவிட மொழிகளில் காணப்படும் நுண்கலை, தத்துவம், சமயம் முதலிவற்றின் பொதுத்தன்மை பற்றி ஆராய்ச்சிகள் செய்ய

வும் 1974இல் இவ் ஆய்வு மன்றம் தோன்றியது. புதிய இயக்குநர் பொறுப்பினை ஏற்றிருக்கும் டாக்டர் ஆறு அழகப்பனுர்க்கு நமது வாழ்த்துக்கள் உரித்தாகட்டும்.

## பேராசிரியர் இளங்கோவன் மறைவுக்கு இரங்கல்

சென்னைப் பல்கலைக் கழக இலக்கியத் துறையின் ஆசிரியர் மாணவர் கருத்தரங்கின் சார்பில் சூலைத் திங்களில் நடைபெற்ற பேராசிரியர் மா. ரா. இளங்கோவன் மறைவுக்கு இரங்கல் கூட்டத்தில், இலக்கியத் துறைத் தலைவர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் மறைந்த பேராசிரியரின் அறிவு, ஆற்றல், பண்பு நலங்கள், தமக்கும் பேராசிரியர் அவர்கட்கு மிடையே நிலவிய நட்பு முறை இன்னபிற செய்திகளை மிக விரிவாக எடுத்துரைத்தார்.

## மாணவர் மன்றத் தலைவர்
## புலவர் கோ. வில்வபதி மணிவிழா

சென்னை மாணவர் மன்றத் தலைவர் புலவர் கோ. வில்வபதி அவர்களின் மணிவிழா 12-6 81 அன்று அவர்தம் இல்லத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. தணிகை உலகநாதன் அவர்கள் வந்திருந்தோர் அனைவரையும் வரவேற்று உரையாற்றினர்.

அடுத்து வல்லை பாலசுப்பிரமணியம், புலவர்கள் சா. இராமாநுசம், மி. ச. நடேசனர், ப. கி. பொன்னுசாமி, மா. ரா. வாஞ்சிக்கோவன், ஆ. தங்கவேலனர், சிவமுத்துதாசன் ஆகியோர் மணிவிழாச் செல்வர் வில்வபதி அவர்களைப் பாராட்டியும் வாழ்த்தியும் உரையாற்றினர். மயிலை சிவ மாசிலாமணி 60 காசுகள் பதித்த படம் ஒன்றினைக் காணிக்கையாகத் தந்தனர். குடும்பச் சார்பில் திரு. செ. கன்னியப்பன் பி.ஏ. அவர்கள் தமது வாழ்த்தினைத் தெரிவித்தார்.

மற்றும் மன்றப் பள்ளிகளின் தலைமை ஆசிரியர்கள், ஆசிரியர்கள் ஆகியோரும் தம்முடைய வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொண்டனர்.

புலவர் வில்வபதி அவர்கள் பெங்களூர் அலாய்சிபஸ் உயர்பள்ளியில் மூன்றாண்டுகாலமும், சென்னை இந்து தியலாஜிகல் உயர்நிலைப் பள்ளியில் 37 ஆண்டுகளும் தமிழாசிரியராகப் பணியாற்றியுள்ளார். 1943யிலிருந்து மாணவர் மன்றத்தில் பணியாற்றி வருகிறார். புலவரவர்கட்கு ஆண்மக்கள் மூவரும், பெண்மக்கள் நால்வரும் உளர்.

இங்ஙனம் பல்லாற்றானும் சீரும் சிறப்பும் பெற்று வாழ்வாங்கு வாழ்ந்துவரும் புலவர் வில்வபதி அவர்களும் அவர்தம் துணைவியாரும் மேலும் நலம் பல பெற்றுப் பல்லாண்டுகள் வாழ எமது உளமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு, ௫௫-௫௧௧ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | கு. திருமாறன், எம். ஏ., திருச்சி | 20—00 |

———

# மதிப்புரை

## ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனார் வாழ்க்கை வரலாறு

[ஆசிரியர்: வி. சந்திரன், பி. ஏ., பி. எல். சொர்ணகுரு பதிப்பகம்' (107/1.) புதிய எண் 48, ஆர்க்காட்டுச் சாலை, கோடம்பாக்கம், சென்னை-24 விலை: ரூ. 10-00]

'தமிழ் பிறமொழி கலவாமல் தனித்தியங்க முடியுமா?' என்று சிலர் கேட்ட காலம் ஒன்றுண்டு. அந் நிலையை மாற்றியமைத்துத் தமிழ் தனித்தியங்கக் கூடியது மட்டுமன்று, தமிழால் எல்லாம் இயலும் என்று தனித்தமிழின் ஆற்றலை செயல்படுத்திக் காட்டியவர் ஆட்சிமொழிக்காவலர் திரு. கீ. இராமலிங்கனார் அவர்கள். தாம் அமர்ந்த பதவிகள் தமக்காக அல்ல, தமிழுக்காக எனக் கருதி அரசுத் துறைகளிலெல்லாம் நல்ல தமிழ் நடமாடச் செய்த இப் பெரியாரின் வரலாற்றைத் தமிழ் நன்மக்கள் படித்துப் பயன்பெற வேண்டும் என்னும் நன்னோக்கத்துடன் இந்நூலை உருவாக்கியுள்ள திரு. சந்திரன் அவர்களின் முயற்சி பாராட்டத் தக்கது.

## வழிபாட்டில் வல்லாண்மை

[ஆசிரியர்: சிந்தனைச்செம்மல் கு. ச. ஆனந்தன் பி. காம்., பி. எல் 45. பாரதி வீதி. கோபி செட்டிப்பாளையம்-638452. விலை. ரூ. 4-50]

அரசியல், பொருளியல் துறைகளில் வல்லாண்மை நிலவுதல் எல்லா நாடுகளிலும் உண்டு. ஆனால் கடவுளை வழிபடுதலில் வல்-லாண்மை நிலவும் வியத்தகு நிலையினை இந்நாட்டிலன்றி வேறு எந் நாட்டிலும் காண்பது அரிது. இங்கு ஆகமங்கள் என்ற பெயரால் சமற்கிருதமே கோலோச்சுகின்றது. இறைவனை அழைக்க—வழிபட தமிழ் தகுதியற்றது என்பது இங்குள்ள சமய வல்லாண்மையாளர் சிலரின் கருத்து. இத்தகைய நிலையினை மாற்றியமைக்க இந் நூலாசிரியர் மேற்கொண்ட முயற்சியின் விளைவே இந் நூல்.

## சங்கத் தமிழ்ப் பொன்மொழிகள் தெளிவுரை

[ஆசிரியர்: க. முத்துச்சாமி, எம். ஏ., பொதிகை நிலையம் 29/J தாபே சாலை, முசிறி 621211. விலை. ரூ. 10-00]

தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றி லுள்ள நீதிக் கருத்துக்களை, அறம்-பொருள் இன்பம் என்னும் முப் பிரிவுகளில் 30 தலைப்புக்களில் 300 பொன் மொழிகளைத் தொகுத்து அவற்றிற்குரிய தெளிவுரையினையும் இணைத்து இந்நூலை உருவாக்கி யுள்ள ஆசிரியரின் முயற்சி பாராட்டத் தக்கது. பேச்சாளர் எழுத் தாளர் ஆகியோர்க்குப் பயன்படத் தக்க நூல்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிட்.

### கழக நிலையங்களில் கிடைக்கும்

## பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| நூல் | ரூ. | கா. |
|---|---|---|
| வில்லி பாரதத்தில் தமிழுணர்ச்சி—டாக்டர் ம.பொ.சிவஞானம் | 6 | 50 |
| நம்பிக்கை மலர்கள்—கவிஞர் கண்ணதாசன் | 5 | 00 |
| அம்பிகை அழகு தரிசனம் ,, | 4 | 50 |
| தெய்வத் திருவிளையாடல்கள்—திருமருகல் சிங்காரவேலனர் | 8 | 00 |
| சிறுர்களுக்கான நல்லொழுக்க நெறி—கா. செ. மணவாளன் | 3 | 50 |
| சைவ சமயச் சான்றோர்களின் வாழ்க்கை அனுபவங்கள் ,, | 6 | 50 |
| விடுதலையும் வீடுபேறும்—கி. ஞானசூரியன், எம்.எசி. | 15 | 00 |
| வெளிச்சம் தேடும் விளக்குகள்—இ. முத்துராமலிங்கம் | 8 | 00 |
| கனவுகள் ஆயிரம்—செ. யோகநாதன் | 5 | 00 |
| தமிழ்த் தென்றல் திரு. வி. க.—டாக்டர் ஈ. ச. விசுவநாதன் | 8 | 50 |
| எனக்குத் தொழில் கவிதை—வண்ணை மூர்த்தி | 4 | 90 |
| திருக்குறள் மரபுகள் (ஆய்வு-7)—டாக்டர் கு. மோகனராஜ் | 35 | 00 |
| நிற்க நேரமில்லை—லட்சுமி | 5 | 00 |
| சிங்காரி பார்த்த சென்னை—கவிஞர் கண்ணதாசன் | 7 | 00 |
| அரசியல் சிந்தனைகள்—வே. தமையந்திரன் | 7 | 25 |
| அதிசய உண்மைகள்—எஸ். என். கே. ராஜன் | 6 | 00 |
| நல்ல நண்பர்களைப் பெறுவது எப்படி?—பி. சி. கணேசன் | 6 | 00 |
| ஐம்பொறி அகராதி—பன்மொழிப்புலவர் மு. ச. சிவம் | 20 | 00 |
| வாழ்வாங்கு வாழ வள்ளுவர் வழங்கும் அறிவுரைகள் —பன்மொழிப்புலவர் மு. ச. சிவம் | 2 | 00 |
| திருக்குறள் வினு-விடை ,, | 10 | 00 |
| புதுவை மாநிலத்தில் தமிழ் வளர்ச்சி—சு. தில்லைவனம், எம்.ஏ. | 10 | 00 |
| ஆவிகள் பேசுகின்றன—வி. ரவிச்சந்திரன் | 6 | 00 |
| இதழியல் நோக்கு—மா. ரா. இளங்கோவன், எம்.ஏ. | 8 | 00 |
| இனிக்கும் இலக்கணம்—புலவர் இரா. திருமுருகன் | 7 | 50 |
| கைரேகைக் கலை—சத்தியா, பி.காம். | 20 | 00 |
| நமது செல்வம்—மீ. பா. சோமு | 12 | 50 |
| இந்திய இதழ்கள்—மா. ரா. இளங்கோவன், எம்.ஏ. | 15 | 00 |
| சீட்டுக்கவி—நெல்லை க. சுப்பிரமணியன் | 4 | 50 |
| கூத்தும் சிலம்பும்—அ. அறிவுநம்பி, எம்.ஏ. | 7 | 00 |
| பேரின்பம்—திருமுருக கிருபானந்தவாரியார் | 6 | 00 |
| திருஞானசம்பந்தர்-ஓர் ஆய்வு (முதற் பகுதி) —டாக்டர் வை. ரத்தினசபாபதி | 16 | 00 |
| An Introduction to Tamil Literature—N. Subramaniam | 10 | 00 |
| A Study of Perunkathai — Dr. Vijayalakshimi | 12 | 00 |